
புத்தரின் கடைசிக் கண்ணீர்
இ.தியாகலிங்கம்

# புத்தரின் கடைசிக் கண்ணீர்

**பத்தின் ஐந்து சிறுகதைகள் நீக்கப்பட்ட ஒரு குறுநாவல் அடங்கிய தொகுப்பு இது.**

**இ.தியாகலிங்கம்**



**Buttharin kadaisi kanneer , Short story collections First Edition January 2019**

சுயவெளியீடு

உதவி

lulu.com

# BUTTHARIN KADAISI KANNEER

(A new short story collections from Norway)

First Edition

January 2019

ISBN: 978-0-244-74694-0

Publication Editor

R.Thiagalingam



Buttharin kadaisi kanneer , Short story collections First Edition January 2019

## என்னுரை

நான் உரைப்பதற்கு எதுவும் இல்லை. இது... உங்கள் சுவைப்பிற்கானது.

அன்புடன்

இ.தியாகலிங்கம்

http://www.karainagaran.com

ratnamt67@gmail.com

# தன்னைத் தான் உண்ணும்...

## 1 இயற்கையின் இயக்கம்

நிமலன் வெல்ல வேண்டும் என்று நினைத்தாலும் வலுவான இயற்கையிடம் தன்னை அறியாது அல்லது தன்னை அறிய முடியாததால் மீண்டும் மீண்டும் தோற்றான். அவன் மட்டுமல்ல அத்தினை உயிருள்ள ஜந்துக்களும் நித்தமும் அப்பிடியே தோற்கின்றன. அவை தோற்பதும் இயற்கை வெல்வதும் மாற்றங்கள் சவாரி செய்ய முடியாத என்றும் மாறாத முடிவுகள். இயற்கையால் நாம் படைக்கப்பட்டதே முக்கியமாக அதற்கே என்பது விளங்காது, இயற்கையின் மாயையில் விழுந்து, இறுமாந்து, இறப்பே எம்மைத் தீண்டாது என்கின்ற நினைவோடு ஆடும் அற்பர்களின் ஆட்டங்கள் இந்தப் புவியில் மனித வாழ்க்கையாக விரிகிறது. அதற்கான முடிவு எப்போது என்பதை எப்போதும் தெரியாது வைத்திருக்கும் அந்த இறைவனின் அல்லது இயற்கையின் சூட்சுமம் என்றும் மாறாது. நிமலன் பல இழப்புகளுக்குப் பின்பு சில காலம் தனிமையாக இருந்து பார்த்தான். மகள் என்பது ஒரு காரணமாக இருந்தாலும் மனிதத் தேவை அதைவிட வெல்ல முடியாத பெரும் வேதனையாகியது. இயற்கை எதற்காக உயிரினங்களை இந்த உலகில் படைக்கிறதோ அதில் அது கண்ணாக இருக்கிறது. அதற்குள் அகப்பட்ட நிமலனும் சுமையல்ல சுகம் என்பதாக மீண்டும் மாயையை வாழ்க்கை என்று எண்ணித் துணிந்து செயற்பட்டான். அவன் அதை விரும்பினாலும் அது கைகூடி வருவதாய் அவனுக்கு முதலில் தோன்றவில்லை. எத்தினை முறை உனக்குக் கலியாணம் பேசுவது என்கின்ற கேள்வியால் முதலில் வாயடைத்துப் போனவன் அந்த எண்ணத்தைக் கைவிடவே எண்ணினான். அப்போது சுயமாக இணைய வழி மூலம் துணையைத் தேடிக் கொள்ளலாம் என்கின்ற உண்மை

அவனுக்கு விளங்கியது. கணினி அறிவு நிறைந்த அவனுக்கு அதற்கு மேல் யாரது வழிகாட்டலும் தேவைப்படவில்லை. அவன் இணையத்தில் பதிவு செய்து இன்ப வருகைக்காகக் காத்திருந்தான். முதலில் சில மாதங்கள் எதுவும் கைகூடி வரவில்லை. கைகூடி வரும் என்றும் அவனுக்குத் தோன்றவில்லை.

அந்த அவநம்பிக்கைகளை உடைத்து எறிவது போல ஒரு நாள் மாலை அவனுக்கு ஒரு மின்னஞ்சல் வந்திருந்தது. அதுவும் அவளே சுயமாக எழுதி இருந்தாள். இடையில் எந்தத் தரகுகளும் இல்லாமல் தானே நேராகக் கையாள்வது நிமலனுக்கு மிகவும் பிடித்திருந்தது. இணையத்தில் பல விடையங்கள் மனிதர்களின் நன்மைக்காகச் செய்யப்பட்டு இருக்கிறது. அவை எல்லாம் அனைவருக்கும் நன்மையாகச் செயற்படும் என்பதற்கு எந்த உத்தரவாதமும் கிடையாது. அதைத் தப்பாக பிரயோகப்படுத்துவதற்கு உலகத்தின் பல மூலைகளில் பலர் ஓயாது முயற்சி செய்து கொண்டே இருக்கிறார்கள். துணையை இணையத்தில் தேடுவதும் அப்படியே. எதிர்ப் பகுதி சொல்லவதை எந்த ஆதாரமும் இல்லாமல் நம்ப வேண்டிய கட்டாயம். அதை உறுதி செய்வது பல வேளை முடியாத காரியமே. அதைப்பற்றி எல்லாம் நிமலன் அதிகம் கவலைப்படவில்லை. எதுவும் அப்படி நடக்காது என்கின்ற குருட்டு நம்பிக்கை அவனிடம் இருந்தது. நம்பிக்கைதான் வாழ்க்கை என்கிறார்கள். உறுதியாக நம்பினால் அப்படியே நடக்கும் என்கிறார்கள். நிமலனும் உறுதியாக நம்புவதாய் முதலில் முடிவு செய்தான்.

அவள் புகைப்படத்தை இணையத்தில் நன்கு பார்த்திருந்தான். பார்ப்பதற்கு அழகாகவே இருந்தாள். தங்கம் நிறைய அணிந்திருந்தாள். அதைவிட அவள் ஒரு பட்டதாரி. அதை இங்கிலாந்தில் படித்திருக்கிறாள். இங்கிலாந்தின் குடியுரிமை பெற்ற அவள் தற்போது கொழும்பில் வேலை செய்வதாக எழுதி இருந்தாள். இது ஆரம்பக் காலம் என்பதால் அவளைப் பற்றிய முழுமையான விம்பம் ஒன்றினை அவன் மனதில் உருவாக்க முடியவில்லை. மின்னஞ்சல் தொடர்பு ஒன்றே ஆரம்பப் புள்ளி.

அதில் இருந்தே இனி மேற்கொண்டு அந்த விம்பத்தை அபிவிருத்தி செய்ய வேண்டும் என்று எண்ணிக் கொண்டான்.

அவள் வெள்ளவத்தையில் தாய் தகப்பனோடு வாழ்ந்து வந்தாள். தற்போது சும்மாய் இருந்து நேரத்தை வீணடிக்கக் கூடாது என்பதற்காக வேலை ஒன்றிற்குப் போய் வருகிறாள். அந்த வேலைத்தளம் வெள்ளவத்தையில் இருந்து தூரத்தில் இருப்பதாயும், அதற்குத் தான் பேருந்தில் போய் வருவதாகவும் எழுதிய அவள் அந்த வேலைத்தளத்தில் வேலை செய்வது கடினமாக இருப்பதாயும் எழுதி இருந்தாள்.

இருபத்தாறு வயதான அவள் முதலில் லண்டனில் திருமணம் செய்து இருந்ததாகவும் ஒத்துப் போகாததால் விவாகரத்துப் பெற்று விட்டதாகவும் எழுதி இருந்தாள். என்ன ஒத்துப் போகவில்லை என்பது நிமலனுக்கு விளங்கவில்லை. விவாகரத்து என்பது இப்போது எங்கும் மலிந்து கிடக்கிறது. விவாகரத்துப் பெற்றாலும் எதற்காக இவள் இலங்கைக்குச் சென்று வேலை செய்கிறாள் என்பது மட்டும் நிமலனுக்குச் சிறிதும் விளங்கவில்லை. தாய் தகப்பனைப் பார்த்துக் கொண்டு இருக்கலாம் என்பது காரணமாக இருக்குமோ என்று நிமலன் எண்ணினான். போகப் போக விபரமாக அதைப் பற்றி அறிந்து கொள்ளலாம் என்கின்ற எண்ணத்தோடு மின்னஞ்சல் தொடர்பை அவன் தீவிரப்படுத்தினான்.

அடுத்த கிழமையில் இருந்து ‘வைபர்’ மூலம் செய்தி பரிமாறிக் கொள்வது என்று முடிவாகியது. அதன்படி செய்தி பரிமாறுவது இலகுவாகவும், உடனுக்குடன் சந்தேகங்களைக் கேட்டு அறியக்கூடியதாகவும் இருந்ததோடு, அவளிடம் இருந்து மேலும் புகைப்படங்களையும் நிமலன் கேட்டுப் பெற்றுக் கொண்டான். அவளை மீண்டும் மீண்டும் பார்த்ததில், கதைத்ததில் அவனுக்கு அவள் ஏற்றவளாய் தோன்றினாள். ஆனாலும் லண்டனில் இருந்து போய் கொழும்பில் சில ஆயிரம் ரூபாய்களுக்கு கணக்குப் புத்தகத்தை நோண்டுவது ஏன் என்று நிமலனுக்குத் தொடர்ந்தும் குழப்பமாக இருந்தது. அதற்கான முக்கிய காரணம் அப்பாவும் அம்மாவும் கொழும்பில் தனிமையாக இருப்பதும், அவர்களுக்குத் துணையாக தான் இருக்க வேண்டும் என்றும் அவள் கூறிய

காரணமும் வலுவானதாய் இருந்தாலும் நிமலனுக்கு ஏனோ அதில் முழுமையான திருப்தி ஏற்படவில்லை.

அடுத்து வந்த நாட்களில் அவள் காதல் வசனங்கள் பேச அதற்கு ஏற்ப நிமலனும் காதல் வசனங்கள் பேசினான். முடிவில் அவள் தனது தகப்பனோடு நிமலனைக் கதைக்குமாறு அலைபேசி எண்ணைக் கொடுத்தாள். நிமலன் அவள் கேட்டபடி அலைபேசியில் தொடர்புகொண்டு அவள் தகப்பனோடு கதைத்தான்.

மாமா மிகவும் பண்பாகவும், அமைதியாகவும் கதைத்தார். அப்படிக் கதைக்கும் பொழுது இது அவளின் விருப்பம் என்றும் அதன்படியே அவள் முடிவு எடுத்து இருக்கிறாள் என்றும் அவர் பண்பாகக் கூறியது ஒரு நெருடலை நிமலனுக்குத் தந்தது. அது தாங்கள் அதில் சம்பந்தப்படவில்லை என்பது போல் இருந்ததை அவன் வெகுவாகக் கிரகித்தான். என்றாலும் அவன் அதைப் பெரிதாக எடுத்துக் கொள்ளவில்லை. மாமா அவனிடம் ஊர் விபரம் கேட்டதோடு பல தெரிந்த நபர்களைப் பற்றிக் கதைத்து நிமலனின் அடி நுனி அறிந்து கொண்ட பின்பு திருப்தியாக மகளுடன் கதைக்குமாறு கூறித் அலைபேசியை அவளிடம் கொடுத்தார்.

அடுத்த நாளே எப்போது நீங்கள் கொழும்பிற்கு வருவீர்கள் என்று அவள் கேட்டாள். அத்தோடு விவாகம் செய்து கொள்ள வேண்டும் என்றால் அதை அறிவிப்புப் பலகையில் போட வேண்டும் என்பதோடு அதற்கான ஆவணங்களும் வேண்டும் என்று கூறினாள். அதில் நிமலனுக்கு ஒரு சிக்கல் இருந்தது. நோர்வே மொழியில் இருந்த ஆவணங்களை ஆங்கிலத்தில் மாற்றி அனுப்பி வைக்க வேண்டிய இக்கட்டான வேலையைச் செய்ய வேண்டி இருந்தது. அவன் அதை ஒருவாறு செய்து அனுப்பி வைத்தான். அத்தோடு வைகாசி பத்தில் தான் கொழும்பிற்கு வருவதாயும் அறிவித்தான்.

# 2 தெற்கு ஈழத்தில்

நிமலன் கொழும்பிற்கு விமானப் பயணச்சீட்டு ஒழுங்கு செய்தான். அவள் பெயர் வாணி. அவளது முழுப்பெயர் கலைவாணி செல்வராசா. வாணி மிகவும் கடவுள் பக்தியானவள் போல நிமலனுக்குத் தோன்றினாள். அத்தோடு அவள் பதிவுத் திருமணம் செய்த அடுத்த நாள் ஒரு கோயிலில் அன்னதானமும் கொடுக்க வேண்டும் எனவும் கூறினாள். நிமலனும் அதற்குச் சம்மதித்தான். எல்லாம் முடித்துக் கொண்டு மீண்டும் இங்கிலாந்திற்கு வரலாம் என்று நிமலன் தனது எண்ணத்தைக் கூறினான். அப்படி வந்தாலும் தான் லண்டனுக்குச் செல்ல முடியாது என்று அவள் கூறினாள். ஏன் செல்ல முடியாது? என்று நிமலன் துருவித் துருவிக் கேட்டான். அப்போதே அவள் தனது பழைய வாழ்க்கை பற்றி மெதுவாகக் கூறத் தொடங்கினாள். தான் லண்டனுக்குப் போக முடியாததற்கு முக்கிய காரணம் அவள் முதற் கணவனும் அவர்களது உறவினர்களும் என்றும், அவர்களால் தனக்கு ஆபத்து ஏற்படும் என்றும், இங்கிலாந்திற்குச் சென்றாலும் லண்டனில் தான் போய் வாழ முடியாது என்றும், வேறு ஏதாவது ஒரு நகரத்தில் போய் வாழலாம் என்றும் கூறினாள். அப்போதே வாணி சொல்வதற்குள் நிறையச் சங்கதிகள் இருக்கின்றன என்பது நிமலனுக்கு விளங்கத் தொடங்கியது. அதை முழுவதுமாக அறிந்து கொள்ள வேண்டும் என்கின்ற ஆவல் இருந்தாலும் அவசரப்படாது ஆறுதலாகவே அதைக் கேட்க வேண்டும் என்று அவன் முடிவு செய்து கொண்டான். கொழும்பிற்குப் போகும் வரைக்கும் அவளோடு செய்தி பரிமாறிக் கொண்டாலும், அவளிடம் அதிகம் அவன் அதைப்பற்றிக் கிண்டியதில்லை. அவள் அதற்கு இடம் கொடுக்காது கொழும்புப் புதினங்களும் குடும்பப் புதினங்களும் கூறினாள். தகப்பன் ஒரு பொறியியலாளராக வேலை செய்ததாகவும் தற்போது ஓய்வு உதியம் பெற்றுவிட்டதாகவும், தாய் நோய்வாய் பட்டிருப்பதாகவும் தம்பி ஒருவன் கனடாவில் திருமணம் செய்து இருப்பதாகவும் அவள் செய்தி பரிமாறி இருந்தாள். அத்தோடு பதிவுத் திருமண அலுவல்கள் பார்ப்பதோடு தங்கி நிற்பதற்கு வீடும் எடுப்பதாக எழுதி இருந்தாள். நிமலன் கொழும்பில் மூன்று நாட்கள்

நின்றுவிட்டு பின்பு இங்கிலாந்திற்குச் செல்வது என்று தனது திட்டத்தை ஏற்கனவே கூறியிருந்தான். அப்படிச் சென்றாலே அவளது இருப்பை இங்கிலாந்தில் சரி செய்யலாம் என்பது அவன் எண்ணம். அத்தோடு இங்கிலாந்தில் எந்த நகரத்திற்குப் போய் இருந்தால் அவளுக்கு வசதியாக இருப்பதோடு தனக்கும் போய் வருவதற்கும் வசதியாக இருக்கும் என்கின்ற ஒரு எண்ணமும் அவனிடம் இருந்தது.

*

காலம் காற்றில் கற்பூரம் கரைந்தது போலக் கரைந்திற்று. கனவு கண்ட நாளும் நிமலனுக்கு வந்திற்று. அவன் தேன் உண்ணச் செல்லும் வண்டு போலக் கொழும்பிற்குப் பயணமானான். விமான நிலையத்தில் இறங்கி வெளியே சென்றவன் அவள் தந்தையோடு நிற்பதைக் கண்டு கொண்டான். ஆனால் அவளுக்குச் சற்றுத் தடுமாற்றமாய் இருந்திருக்க வேண்டும். அவனை அடையாளம்காண அவஸ்தைப்பட்டாள். அதற்கிடையில் அவளது தந்தை ‘வாங்க... வாங்க...’ என்று கூறிய வண்ணம் வந்து நிமலனின் கையைப் பற்றிக் குலுக்கினார். அவளும் அதை அடுத்து அருகே வந்து நிமலனுக்குக் கை தந்தாள். நிமலனும் அதைவிட மனம் இல்லாது பற்றிக் கொண்டான். அதனால் அவன் எண்ணங்களும் பற்றிக் கொண்டன. இருந்தும் அதைத் தள்ளி வைத்துவிட்டு, அவள் கையைத் தளரவிட்டு, அவளது தகப்பனோடு கதைத்த வண்ணம் விமான நிலையத்திற்கு வெளியே வந்தார்கள். அவளது தாய் அவர்களோடு விமானநிலையத்திற்கு வரவில்லை. தாய்க்குப் புற்றுநோய் வந்ததால் வாணியின் தாய் அதிகம் வெளியே வருவதில்லை என்று ஏற்கனவே கூறியிருந்தாள். விமானநிலையத்திற்கு வெளியே வெள்ளவத்தை செல்வதற்கு அவர்கள் கூட்டி வந்த வண்டி தயாராக நின்றது. மூவருமாக அதில் ஏறி வெள்ளவத்தைக்குச் சென்றார்கள்.

*



**Buttharin kadaisi kanneer , Short story collections First Edition January 2019**

அந்த அடுக்குமாடிவீடு நவீன குடியிருப்பு ஒன்றிற்குள் புதைந்து இருந்தது. அதன் காவல்காரனுக்கு ஏற்கனவே அவர்களைத் தெரிந்து இருந்ததால் எந்தக் கேள்வியும் இன்றி உள்ளே செல்வதற்கு அனுமதித்தான். அந்தக் கட்டடத்திற்கான இயங்கு ஏணியில் பயணித்து ஒன்பதாவது மாடியில் இருந்த அந்த வீட்டிற்குச் சென்றார்கள். வீட்டிற்குச் சென்றதும் மகளை வீட்டைச் சுற்றிக் காட்டுமாறு கூறிவிட்டு அவளது தந்தை சென்றுவிட்டார். அவள் வீட்டைச் சுற்றிக் காட்டிய பின்பு குளித்துவிட்டு இளைப்பாறுமாறும், தான் உணவு எடுத்து வருவதாகவும் கூறிவிட்டு புறப்பட்டாள். அவ்வளவுதானா என்று நிமலனுக்குக் கேட்க வேண்டும் போல் இருந்தது. ‘இப்போது வேண்டாம். போய்விட்டு வரட்டும்.’ என்று நினைத்துக் கொண்டு விடை கொடுத்தான். பயணக் களைப்பு அவனை வலுவாக அழுத்தியது. நித்திரை கொள்ள வேண்டும் போல் இருந்தது.

அவன் முதற் பார்வையிலேயே அவளிடம் ஏதோ ஒருவித பரபரப்பும், ஒருவித அவஸ்தையும் இருப்பதாக உணர்ந்தான். விவாகரத்து ஆனவள் என்பதில் ஏற்கனவே அவனுக்கு ஒருவித நிச்சயமின்மை. விவாகரத்து என்று வந்தால் யாரில் பிழை இருக்கிறது என்பதை இலகுவில் கண்டு பிடித்துவிட முடியாது. மனிதர்கள் எப்போதும் தான் மட்டும் குற்றம் அற்றவர் என்றே சாதிப்பர். அது மனித இயல்பு. தன்னை முதலில் பாதுகாத்துக் கொள்ளும் இயற்கை கொடுத்த பாதுகாப்பு நடவடிக்கை. தன்னைக் காக்கும் தற்காப்புத் தந்திரம். அதனால் அவர்களில் பிழை இருக்காது என்று யாரும் கூறிவிட முடியாது. இவளில் பிழை இருப்பதற்கு ஐம்பது வீதமான சந்தர்ப்பம் இருக்கிறது. இருந்தும் குற்றம் பார்த்தால் சுற்றம் இல்லை என்பதிற்கு அமைய இதற்குள் கால் வைக்க வேண்டி இருக்கிறது என்பது அவனுக்கு விளங்கியது.

*

அவள் சாப்பாடு கொண்டு வந்தாள். அதை வாங்கிச் சாப்பிட்ட பின்பு அவனோடு இருந்து அவள் கதைத்தாள். நிமலனால்

அவளின் கதையை ஊன்றிக் கவனிக்க முடியவில்லை. அவள் அதைப் பார்த்துவிட்டு,

‘நீங்க இப்ப படுங்க. நான் போயிட்டு வாறன். ஐஞ்சுமணி போல வெளிக்கிட்டு நில்லுங்க. நாங்கள் கதைச்ச மாதிரி நகைக்கடைக்குப் போய் மோதிரங்களை வாங்கிக் கொண்டு வருவம். நான் அப்பாவையும் கூட்டிக் கொண்டு வாறன்.’ என்றாள். நிமலனிற்கு இருந்த அலுப்பிற்கு அதற்கு மறுப்புச் சொல்ல மனம் வரவில்லை. அவன் சரி என்று விடை கொடுத்து அனுப்பினான்.

*

ஐந்தரை மணிபோலத் தாங்கள் சந்தியில் நிற்பதாயும் நிமலனை உடனடியாக வருமாறும் அவள் அலைபேசியில் தொடர்பு கொண்டு அழைத்தாள். நிமலன் அவசரமாக வீட்டைப் பூட்டிக் கொண்டு அங்கே விரைந்தான். அவள் இன்முகத்தோடு நிமலனை வரவேற்றாள். முத்து முத்தாக உடல் எங்கும் வியர்வைத் துளிகள். அது நிமலனுக்குத் திகைப்பைத் தந்தது. அவன் அதைப் பற்றி மேற்கொண்டு ஆராயவில்லை. சிறிது தூரம் நடந்தே அந்த நகைக் கடைக்குச் சென்றார்கள். அது பெரியதொரு நகைக் கடை. பலர் நகை கொள்முதல் செய்வதில் மும்மரமாக இருந்தார்கள். உள்ளே சென்றதும் நல்ல குளிராக இருந்தது. வெளியே இருந்த வெக்கைக்கு அது நல்ல இதம் ஊட்ட வியர்வையும் நிமலனுக்குக் காய்ந்து போயிற்று. அவன் வாணியை மீண்டும் பார்த்தான். அவளுக்குத் தொடர்ந்தும் குளித்தவள் போல வியர்த்துக் கொண்டு இருந்தது. அது கடைக்கு உள்ளேயும் நிற்பதாகத் தெரியவில்லை. அவள் ஒரு கைக்குட்டையை வைத்து அதைத் துடைத்தாள். அவள் துடைத்தாலும் அது அவளை நிம்மதியாக இருக்க விடுவதில்லை என்பது போல வியர்த்தது. நிமலனுக்கு ஒன்றும் விளங்கவில்லை. நோர்வேயில் இருந்து இன்று வந்த எனக்கே வியர்வை நின்றுவிட்டது. ஆனால் இவளுக்கு ஏன் தொடர்ந்து வியர்க்கிறது என்று சுத்தமாக அவனுக்கு விளங்கவில்லை. சிலருக்கு அதிகமாக வியர்ப்பது வளமை. சில வேளை அப்படியாக இருக்கலாம் என்று எண்ணினான். பின்பு தனது சந்தேகத்தை

அவளிடமே கேட்டுவிட வேண்டும் என்று எண்ணி அதை அவளிடமே கேட்டான்.

'என்ன உங்களுக்கு இப்படி வேர்க்குது?' என்றான் அவளைப் பார்த்து.

'அது ஒண்டும் இல்லை. இங்கத்தை வெக்கை இன்னும் எனக்கு ஒத்துக் கொள்ளுதில்லை. இடைக்கிடை இப்படித்தான் வேர்க்கும். அதை விடுங்க. நாங்கள் இப்ப மோதிரம் பார்ப்பம் வாங்க.' என்றாள்.

'சரி வாங்க.' என்று நிமலன் அவளையும் அவளது தகப்பனையும் பார்த்துக் கூறினான்.

கடைக்காரர்களுக்கு இவர்கள் ஏற்கனவே அறிமுகமானவர்கள் என்பதால் அவர்கள் மிகவும் அக்கறையோடு இவர்களை வரவேற்று நகைகளைக் காட்டத் தொடங்கினார்கள். அதற்கிடையில் வழமை போலக் குடிப்பதற்கு குளிர் பாணமும் கொண்டு வந்து கொடுத்தார்கள். வாணிக்கு 'என்' என்கின்ற எழுத்தோடு ஒரு மோதிரமும் நிமலனுக்கு 'வீ' என்கின்ற எழுத்தோடு ஒரு மோதிரமும் எடுத்துக் கொண்டு கடையைவிட்டுப் புறப்பட ஏழுமணி ஆகிவிட்டது. எல்லோருமாக அவர்கள் வீட்டிற்குச் சென்று இரவுச் சாப்பாட்டை சாப்பிட்டு மாமியோடும் அளவளாவி முடிய நிமலனைக் கொண்டு வந்து அவன் தங்கும் வீட்டில் விட்ட பின்பு அவர்கள் சென்று விட்டார்கள். நாளைக்கு பதிவுத் திருமணம் நடக்க இருப்பதால் இந்த இரவில் எல்லோரும் ஆறுதலாக நித்திரை கொள்ள வேண்டும் என்பது அவர்களுடைய அறிவுரை. அதுவே தனக்கும் நல்லது என்று அவனுக்குத் தோன்றியது. நாளைக்கு அந்த அலுவல் முடிந்துவிட்டால் தான் தனித்து இருக்க வேண்டியது இல்லை என்பதில் நிமலனுக்கு ஒருவித நிம்மதி உண்டாகியது.

*

அடுத்த நாள் அவர்களுக்குத் தெரிந்த எட்டு நபர்களோடும் சில குழந்தைகளோடும் அந்தப் பதிவுத் திருமணம் வீட்டில் நன்றே நடந்தேறியது. அதன் பின்பு வரவழைக்கப்பட்ட சாப்பாட்டை ருசித்துச் சாப்பிட்டு ஆறுதலாகச் சிறிது நேரம் இருந்து கதைத்த பின்பு அவர்கள் சென்று விட்டார்கள். நிமலனின் மாமாவும் மாமியும் மேலும் சிறிது நேரம் இருந்து கதைத்தார்கள். பின்பு மகளுக்கும் மருமகனிற்கும் இடையில் நிற்க விரும்பாது மெதுவாக,

'அப்ப நாங்கள் போயிட்டு வாறம். நாளைக்கு மத்தியானம் நீங்கள் இரண்டு பேரும் வீட்டை வாங்கோ. நாளைக்கு மாமாவின்ரை சமையல்தான். நல்லாச் சமைப்பார். எனக்கு வருத்தம் வந்த பிறகு இவர்தான் தம்பி சமையல் சாப்பாடு எல்லாம்.' என்றார் மாமி.

'அது எல்லாம் இப்ப எதுக்கு? நீங்கள் நாளைக்கு வாங்க. அதோடை இப்ப உங்களுக்குக் களைப்பாய் இருக்கும். நீங்க ஆறதலா றெஸ்ற் எடுங்க.' என்றார் மாமா.

பின்பு இருவரும் சில காலிப் பாத்திரங்களைத் தூக்கிக் கொண்டு புறப்பட்டார்கள். நிமலனும் வாணியும் கதவுவரை சென்று அவர்களை வழியனுப்பி வைத்தார்கள்.

அதன் பின்பு தனிமையில் அவள். தனிமை கிடைத்தால் இந்தப் பூனையும் புலியாகும் என்பது யாருக்குப் பொருந்தாவிட்டாலும் நிமலனுக்கு அது நன்கு பொருந்தும். ஒரு நாளைக்கு ஒரு ஆண் உடல் உறவைப் பற்றிச் சராசரியாகப் பதினெட்டு முறையும் ஒரு பெண் கிட்டத்தட்டப் பத்து முறையும் சிந்திக்கிறார்கள் என்று விஞ்ஞானம் சொல்கிறது. நிமலனுக்கு அதில் சந்தேகமாகத்தான் இருந்தது. அது தனது ஆற்றல் என்று நினைத்தவனின் இதழ்களில் ஒரு புன்சிரிப்புத் தவழ்ந்தது.

கதவுகள் சாத்தியதுமே அவன் கதையில் சாத்துவாய் ஊத்தத் தொடங்கியது. அவளுக்கும் அது பிடித்துக் கொண்டது. ஏற்கனவே அவள் இணையத்தின் மூலம் இவனைவிட அதிகம்

கதைத்திருந்தாள். அதற்குத் தான் தயார் என்பதை அவள் மறுக்கும் விதமாக எதுவும் செய்யவில்லை. நிமலனுக்கு எந்தத் தயக்கமும் இருக்கவில்லை. அவள் கையைப் பிடித்துக் கட்டி அணைத்தான். அவர்கள் இரவு அதில் இருந்து மங்களகரமாகத் தொடங்கியது.

*

அடுத்த நாள் பதினொரு மணி போல இருவரும் புறப்பட்டு வாணியின் வீட்டிற்குச் சென்றார்கள். வாணிக்கு மிகவும் சந்தோசமாய் இருக்கும் என்பது நிமலனுக்குத் தெரியும். நிமலன் அவர்களுக்காக வாங்கி வந்த பரிசுப் பொருட்களை மறவாது எடுத்துக் கொண்டான். வெளியே வந்தவர்கள் ஒரு ஓட்டோவைப் பிடித்துக் கொண்டு அங்கே இருவரும் சென்றார்கள். அது ஒரு நடுத்தர வசதிகள் கொண்ட அடுக்குமாடிக் குடியிருப்பு. அதில் இரண்டாவது மாடியில் இவர்கள் வீடு இருந்தது. வீடு நோர்வேயுடன் அல்லது ஊரில் உள்ள வீடுகளுடன் ஒப்பிட்டால் கோழிக்கூடுதான். இருந்தாலும் சோபா, தொலைக்காட்சி, அலுமாரி, அழகுப் பொருட்கள் என்று அதன் தரம் குறை சொல்ல முடியாத அளவில் உள்ளே அலங்காரமாய் ஜொலித்தது. அதைவிடத் தாய் தகப்பன் தங்களது அறைக்குக் குளிரூட்டி வைத்திருந்தனர். அதனால் அது கிட்டத்தட்ட மூன்று நட்சத்திர விடுதிக்கு ஒப்பாக இருந்தது. அவர்கள் இருவரது வரவையும் எதிர்பார்த்துச் சமையலில் ஈடுபட்டுக் கொண்டு இருக்கும் போது இவர்கள் போய் வாசலில் நின்றார்கள். மாமி வந்து கதவைத் திறந்து,

‘வாங்கோ... வாங்கோ.’ என்றார்.

மாமா ‘உள்ள வாங்கோ... வந்து இருங்கோ...’ என்றுவிட்டுச் சமையலைத் தொடர்ந்தும் கவனித்தார். அவர்தான் இந்த வீட்டில் இன்று இல்லை என்றும் பிரதான சமையற்காரர். வாணி வீட்டில் நிற்கும்போது தான் சமைப்பதாய் கூறினாள். அப்போது மாத்திரம் அவருக்கு விடுதலை. ஆனால் அவள் தற்போது வேலைக்குப் போவதால் அந்தப் பாக்கியம் ஞாயிற்றுக் கிழமைகளில்

மட்டும்தான் அவருக்குக் கிட்டும். மாமியும் சமையலில் பங்கு கொள்வது நிமலனுக்குத் தெரியும். அது மரக்கறி துப்பரவு செய்து அதை வெட்டிக் கொடுப்பதுவரை நடக்கும். மற்றவை எல்லாம் மாமாவின் கட்டுப்பாட்டிற்குள்.

நிமலனுக்கு மாமாவைப் பார்க்கப் பரிதாபமாகவும், பெருமையாகவும் இருந்தது. எவ்வளவு புரிந்துணர்வும், அன்பும் இருந்தால் இப்படி எல்லாம் கவனித்துக் கொள்வார் என்று எண்ணத் தோன்றியது. இலங்கையில் திருமணம் என்பது இறப்பு வரையும் என்று இருந்த காலத்தைச் சார்ந்தவர்கள் அவர்கள். இப்போது காலம் மாறிவிட்டது என்பது நிமலனுக்கு நன்கு தெரியும். அதற்கு தாங்கள் ஒரு உதாரணம் என்பதை அவன் மறக்கவில்லை.

மாமி அவனது கவனத்தைத் திருப்புவது போல அவனது அப்பா அம்மா பற்றிய விபரங்களை மீண்டும் ஒரு முறை விபரமாகக் கேட்டு அறிந்தார். பின்பு தங்கள் பரம்பரை பற்றி அளந்து தள்ளினார். நிமலனும் அக்கறையாக அதைக் கேட்பதாக நடித்தான். மாமா சமையல் அலுவல்களை அக்கறையோடு பார்த்தார். ஏதோ விரதம் என்பதால் அன்று மரக்கறியே சமைத்து இருந்தார்கள். நிமலனுக்கும் பசிக்கத் தொடங்கி இருந்தது. எப்போது கூப்பிடுவார் என்று எதிர்பார்த்துக் கொண்டு இருந்தான். வாணி அப்பாவுக்குத் துணையாக உதவி செய்து கொண்டு நின்றாள்.

மாமி கதை அலுக்க ஒருவாறு புகைப்பட அல்பத்தைத் தூக்கி அவன் கையில் கொடுத்தார். அதைப் பார்த்துவிட்டு வேலை முடிந்ததால் வாணியும் பக்கத்தில் வந்து இருந்து ஒவ்வொரு பக்கமாகப் புரட்டவும் அது யார் இது யார் என்று விபரமாக விளக்கம் கொடுத்தாள். அதில் வாணியின் சிறுபிராயத்துப் புகைப்படங்களும் இருந்தன. அவை மிகவும் அழகாக இருந்தன. அவள் வம்பலப்பிட்டி இராமநாதன் இந்து மகளிர் கல்லூரியில் படித்ததாகக் கூறி ஆசிரியர்களுடன் நின்று தான் எடுத்துக் கொண்ட புகைப் படங்களை அவனுக்குக் காட்டினாள்.

மாமா இறுதியாக அப்படமும் வாழைக்காய் பொரியலும் பொரித்து முடித்த பின்பு சாப்பிட வருமாறு அழைத்தார். அதற்கு மறுப்புத் தெரிவிக்கும் நிலையில் நிமலன் இருக்கவில்லை. அவன் எழுந்து சென்றான். அவனைத் தொடர்ந்து மற்றவர்களும் வந்தார்கள்.

மாமி தான் பரிமாறுவதாகவும் மற்றவர்களை இருக்குமாறும் கூறினார். மாமாவுக்கு இளைப்பாற வேண்டி இருந்தது. அதற்கு மறுப்புத் தெரிவிக்காது இருந்ததை நிமலன் பார்த்து இரசித்தான்.

குத்தரிசிச் சோறு, கத்தரிக்காய் குழம்பு, பருப்புக் கறி, கீரைக் கறி, மிளகாய் பொரியல், வாழைக்காய் பொரியல், அப்படம், தயிர், சொதி என்று சமையல் அமர்க்களப்பட்டது.

'என்ன பாத்துக் கொண்டு இருக்கிறியள்? சாப்பிடுங்க... சாப்பிடுங்க...' என்று மாமாவும் மாமியும் கூற நிமலன் சாப்பிடத் தொடங்கினான். வாணி பல முறை ஏற்கனவே கூறி இருந்தாலும் அவன் இப்படி இருக்கும் என்று எதிர்பார்க்கவில்லை. சமையல் அவ்வளவு சுவையாக இருந்தது. அவன் அதன் பின்பு கதைப்பதைவிடச் சுவைப்பதில் மும்மரமாகினான். அன்று நேரம் போனதே தெரியாது எல்லோரும் அதன் பின்பு சோபாவில் இருந்து கதைத்தார்கள். வாணி கதைத்துக் கதைத்து தனது பயணத்திற்கான அலுவல்களையும் கவனித்துக் கொண்டாள். போகும் போது பயணப் பெட்டியைக் கொண்டு சென்றால் அப்படியே அந்த வீட்டில் இருந்தே இங்கிலாந்திற்குப் பயணிக்கலாம் என்பது அவள் நோக்கம். அவள் ஏன் அப்படி எண்ணினாள் என்பது பற்றி நிமலன் அப்போது சிந்திக்கவில்லை. அன்னதானத்தைப் பற்றியும் பின்பு அவள் கதைக்கவில்லை. உடனடியாகவே திரும்பிச் செல்வதாகப் பயணச்சீட்டு ஒழுங்கு செய்து வருமாறு இறுதியில் கூறியிருந்தாள். தானும் அங்கிருந்தே செல்ல வேண்டும் என்பதால் அது தனக்கும் வசதியாக இருக்கும் என்று நிமலன் எண்ணிக் கொண்டான்.

*

சாப்பிட்டு முடிந்து வீட்டிற்கு வரும்போது பதிவுத் திருமணத்தின் போது எடுத்த புகைப்படத்தை வாங்க வேண்டும் என்று நிமலனையும் கூட்டிக் கொண்டு அந்த ஸ்ரூடியோவுக்கு வாணி, மாமா நிமலன் ஆகியோர் செல்வதாக இருந்தது. போகும் போது எல்லோரும் ஓட்டோவில் போவதாய் உத்தேசம். ஆனால் அது ஏதோ காரணத்தால் வரப் பிந்திப் போய்விட்டது. ஓட்டோ வரவில்லை என்றதும் வாணியின் தாய் பேசத் தொடங்க வாணியின் முகம் சட்டென்று மாறியது. அவள் தாயைப் பார்த்து முறைத்தாள். ஏன் அவர் அப்படிப் பேசத் தொடங்கினார் என்பது நிமலனுக்கு விளங்கவில்லை.

'நான் இங்க இருந்து வெளிக்கிட்டால்தான் எனக்கு நல்லது. வாங்க நாங்கள் போவம்.' என்று அவன் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு அவள் நடந்தாள். நல்ல வேளையாக ஓட்டோ வந்து விட்டது. பின்பு மூவருமாகப் புறப்பட்டு ஸ்ரூடியோவுக்குச் சென்றார்கள். அங்கு இரண்டு புகைப்படப் பிரதிகளும் ஒரு 'டீ.வி.டீ'யும் பெற்றுக் கொண்டனர். அதில் ஒரு பிரதியை மாமா எடுத்துக் கொள்ள மீதியைத் தாங்கள் வாங்கிக் கொண்டு வீட்டிற்குச் சென்றார்கள். மாமா போகும் போது இரவுச் சாப்பாடு கொண்டு வீட்டிற்கு வருவதாகக் கூறிவிட்டுச் சென்றார்.

*

தொடக்கத்தில் எல்லாம் பரபரப்பாய் இருக்கும். வாணியோடு அந்தக் காலகட்டத்தில் இருப்பது நிமலனுக்கும் அப்படியே இருந்தது. ஆனால் அவள் மனநிலை அடிக்கடி மாறுவதை அவனால் கவனிக்க முடிந்தது. அது அவனை நோக்கியதாக இல்லாவிட்டாலும் குறிப்பாகத் தாயை நோக்கியதாக இருந்தது. தாயுடன் ஏதோ அவளுக்கு ஒத்துப் போகவில்லை என்று அவனால் ஊகிக்க முடிந்தது. அவளது தகப்பன் அவளது பக்கம் என்றாலும் தாயின் சொல்லைத் தட்ட முடியாதவரே அவர் என்பதையும் நிமலன் நன்கு கவனித்தான். அவர்கள் எப்படி இருந்தாலும் பிரச்சனை இல்லை என்பது நிமலனுக்குத் தெரியும். ஆனால் வாணி அடிக்கடி அவதிப்படுவதும், மனநிலை மாறுவதும் சிறிது அவனைக் கவலை கொள்ள வைத்தன. அதை அவளிடம்

கேட்க வேண்டும் என்று முதலில் அவனுக்குத் தோன்றினாலும் அவன் அதைச் செய்யவில்லை. ஆறுதலாக அவளே அதைச் சொல்வாள் என்பது அவன் அவிப்பிராயம். அவன் அதற்காகக் காத்திருந்தான்.

*

அடுத்த நாள் காலை மாமா மாமி சகிதம் நிமலன் வாணியோடு விமான நிலையத்திற்குச் சென்றான். விமான நிலையத்தில் வெளியிலேயே பிரியாவிடை கொடுத்து மாமா மாமியை அனுப்பலாம் என்று நினைத்ததை மறுத்து அவர்கள் உள்ளே வந்து பிரியாவிடை தருவதாக அனுமதிச்சீட்டுப் பெற்றுக் கொண்டு உள்ளே வந்தார்கள். சிறிது நேரம் கதைத்துக் கொண்டு நிற்கவே பாதுகாப்புச் சோதனை நடத்தி உள்ளே போகவேண்டிய நேரம் வந்துவிட்டது. நிமலனும் வாணியும் விடை பெற்றுக் கொண்டு உள்ளே சென்றார்கள். மாமாவும் மாமியும் கண்ணாடிச் சுவருக்கு வெளியே நின்று இவர்களைப் பார்த்துக் கொண்டு நிற்பதை நிமலன் பரிதாபத்தோடு கவனித்தான். ஏன் இவர்களுக்கு இந்தச் சிரமம் என்பது அவனுக்கு விளங்கவில்லை.

பயணச் சீட்டுக்களைப் பரிசோதித்துப் பொதிகளை அனுப்பிய பின்பு மீண்டும் கண்ணாடிச் சுவர் அருகே வந்து அவர்களுடன் பிரியாவிடை பெற்றுக் கொண்டு இருவரும் குடிவரவு குடியகல்வுப் பகுதியை நோக்கிச் சென்றார்கள்.

*

லண்டனில் இறங்கிக் கறோவில் இருக்கும் மாமி வீட்டிற்குச் சென்று அவருக்குச் சில பரிசில் பொருட்கள் கொடுத்துவிட்டுத் தான் கொடுத்து வைத்த நகையையும் வாங்கிக் கொண்டு வரவேண்டும் என்று வாணி ஏற்கனவே நிமலனிடம் கூறியிருந்தாள். அவளுக்கு வண்டி ஓட்டத் தெரியும் என்பதால் இறங்கியவுடன் விமான நிலையத்திலேயே வண்டியை வாடகைக்கு எடுத்துக் கொண்டு அங்கே செல்வதற்குப் புறப்பட்டார்கள். விமான நிலையத்திற்கு அருகில் விடுதி பதிவு செய்து இருந்தாலும்

அங்கே செல்லாது முதலில் கறோவுக்குச் சென்று வருவதாய் முடிவு செய்தார்கள். விடுதிக்குச் சென்றால் மேலும் தாமதமாகி விடும் என்கின்ற அவசரம் அவர்களுக்கு. அடுத்த நாள் காலை எழுந்தவுடன் மஞ்செஸ்ரர் செல்ல வேண்டும் என்பது அவர்கள் திட்டம். அதற்கான பேருந்து விமான நிலையத்தில் இருந்து புறப்படும். வண்டியைக் கொடுத்துவிட்டுப் பேருந்தில் அங்கே செல்வதாக அவர்கள் நினைத்து இருந்தார்கள்.

வாகனத்தை எடுத்தால் எந்தப் பிரச்சனையும் இல்லாது அவள் ஓட்டிச் செல்வாள் என்பதே நிமலனுடைய எதிர்பார்ப்பாய் இருந்தது. ஆனால் அவள் ஓட்டத்தில் பதட்டம் இருந்ததை அவள் வாகனம் எடுத்ததுமே நிமலன் அவதானித்தான். அவள் வழியை இடைக்கிடை மறந்தது போல அவஸ்தைப்பட்டாள். லண்டனில் வாகனம் வைத்திருந்தவள் ஏன் இப்படி அவஸ்தைப்படுகிறாள் என்பது அவனுக்கு விளங்கவில்லை. இந்த வயதில் இவளுக்கு மறதியா என்பது அதைவிடப் புதினமாக இருந்தது. நெடுஞ்சாலையில் சென்றவள் திடீரென வெளியே எடுப்பதை மறந்துவிட்டதாகக் கூறினாள். நிமலன் திகைப்போடு அவளைப் பார்த்தான். அவனுக்குச் சாதுவான குழப்பம். அவனுக்கு வாகனம் ஓட்டத் தெரிந்தாலும் லண்டனில் அவன் இதுவரை வாகனம் ஓட்டியது இல்லை. அதைத் தான் செய்ய வேண்டி வரும் என்று அவன் எதிர்பார்த்து இருக்கவில்லை. இவளுக்கு ஏன் இந்தத் தடுமாற்றம், மறதி என்பது தொடர்ந்தும் அவனுக்கு விளங்கவில்லை. நீண்ட காலத்தின் பின்பு வந்ததால் உண்டான தடுமாற்றமாக இருக்கும் என்று தன்னைத் தானே சமாதானம் செய்ய முயற்சித்தான். அவள் ஒருவாறு தடுமாற்றத்தோடு வெளியே எடுத்து, மெது மெதுவாக வழியைக் கண்டு பிடித்து அந்த உறவினர் வீட்டிற்கு சென்றாகிற்று. அங்கே நிமலனைக் வண்டிக்கு உள்ளேயே இருக்குமாறு கூறிவிட்டு அவள் தான் மாத்திரம் சென்றாள். இப்போதே மாமிக்கு அறிமுகம் செய்து வைத்தால் அந்த விபரம் எப்படியோ தனது முதற் கணவனுக்குப் போய்விடும் என்றும் அது தனக்கு ஆபத்து என்றும் அவள் பயப்பட்டதால் நிமலனும் அது சரி என்று ஒத்துக் கொண்டு வண்டிக்குள் காத்திருந்தான்.

அந்த நீண்டநேரக் காத்திருப்பின் பின்பு ஒருவாறு அவள் மீண்டும் மீண்டு வந்தாள். அதை அடுத்து அருகில் இருந்த தமிழ் கடையொன்றில் பிட்டு வாங்கிக் கொண்டு மீண்டும் விமான நிலையத்தை நோக்கிப் பயணித்தார்கள். அங்கே ஒருவாறு விடுதியைக் கண்டுபிடித்துச் சாவியை வாங்கிக் கொண்டு உள்ளே சென்று, குளித்துச் சாப்பிட்ட பின்பு தங்கள் ஆசையைத் தீர்த்துக் கொண்ட அவர்கள் நிம்மதியாகப் படுத்து உறங்கினார்கள்.

*

அடுத்த நாள் காலை மஞ்சஸ்ரருக்கு 'நஸ்னால் எக்ஸ்பிறசி'இல் பயணத்தைத் திட்டம் இட்டது போலத் தொடங்கும் முன்பு வாகனத்தைக் கையளித்து, அதற்கான பற்றுச்சீட்டை நிமலன் பெற்றுக் கொண்டான். எடுத்ததிற்கும் கொடுப்பதிற்கும் இடையில் வாகனம் காயப்படவில்லை என்பது நிமலனுக்கு ஆறுதல் தரும் செய்தி ஆகியது. வாணி நிமலனின் கையை இறுகப் பற்றி தலையை அவனின் தோள்மூட்டில் சாய்த்த வண்ணம் பேருந்தில் பயணித்தாள். நிமலனுக்கு அது நன்கு பிடித்துக் கொண்டது. பின்பு ஏதோ நினைத்தவள் போல அவனோடு கதைக்கத் தொடங்கினாள்.

'எனக்குச் சரியான பயமாக இருந்திச்சுது. யாரும் கண்டால் பெரிய பிரச்சனையாகி இருக்கும். அவனைக் கண்டால் எனக்கு நடுங்கத் தொடங்கீடும். உண்மையா லண்டனுக்குப் போக விருப்பம் இல்லை. ஆனா மாமி பாவம். அவதான் நான் பிரிஞ்சு வந்து இருக்கேக்க என்னைப் பிள்ளை மாதிரிப் பார்த்தவா. இப்ப மனிசனும் இல்லைத் தனிய இருக்கிறா. அவவுக்கு உதவியா இருக்கலாம். ஆனா லண்டனில இருக்க முடியாது. எப்பவும் அவையால எனக்கு ஆபத்து வரலாம்.'

'அவ்வளவு மோசமானவனா அவன்? நீ சொல்லுகிறதைப் பார்த்தால் ஏதோ படத்தில வாற வில்லன் மாதிரியே இருக்குது.'

'உங்களுக்கு அவனைப் பற்றித் தெரியாது.'

‘ம்… நீ சொன்னால்தான் தெரியும். என்ன எண்டு சொல்லன் கேட்பம்?’

‘நான் ஏன் அவனைக் கண்டாப் பயப்பிடுகிறன் எண்டதுக்கு சரியான காரணம் இருக்குது.’

‘என்ன எண்டு சொல்லு.’

‘அவன் சாதாரண றவுடி மாதிரி இருந்தால் பருவாய் இல்லை. அவன் அதில வேறை முக்கிய ஆளுக்கு இங்க வொடிக்காட்டாய் இருந்தவன். உங்களுக்கு யார் எண்டு தெரியும் தானே? இவன் இங்கத்தைக் கறுப்புப் படையில ஒரு ஆள். பிஸ்ரல் எல்லாம் வைச்சிருந்தவன் எண்டாப் பாருங்க. எனக்கு இருந்த பயத்தைப் பற்றி இப்ப விளங்குதா?’

‘அவ்வளவுக்கு எல்லாம் இங்க நடந்ததா?’

‘நீங்கள் என்ன இது ஒஸ்லோ எண்டு நினைச்சனியளா? இது எல்லை இல்லாத லண்டன். எவ்வளவு சனம்? எவ்வளவு வருமானம்? எதுவும் செய்கிறத்துக்கு இங்க ஆட்கள் இருந்தாங்கள். இல்லாட்டியும் பிரான்ஸ், ஜெர்மன், சுவிஸ் எண்டு சனம் வந்து இங்க குவியும். எது வேணும் எண்டாலும் செய்கிற அளவிலதான் அவங்கள் இருந்தவங்கள். இவன் வேறை நிறையத் தண்ணி அடிப்பான். வெறியில சுட்டது எண்டாலே தண்டனை குறைவாகத்தானே கிடைக்கும்? என்ரை நிலைமையை யோசிச்சுப் பாருங்க? அவன் என்னைப் பையித்தியம் ஆக்கிற மாதிரிப் பல காரியம் செய்திருக்கிறான். நான் எதுவும் செய்ய முடியாமல்தான் கடைசியா வெளிக்கிட்டன். ’

‘பையித்தியம் ஆக்கிற மாதிரி எண்டா எப்பிடி? எனக்கு விளங்கேல்லை.’

‘அது பெரிய கதை. இல்லை என்னுடைய வாழ்க்கை. ஒருத்தரைப் பிடிக்காமல் இல்லாட்டி வேறை ஒருத்தரைப் பிடிச்சுப் பிரிகிறது வேறை. இது அப்பிடி இல்லை. ஒருத்தரைப் பைத்தியமாக்கி தாங்கள் வாழ வேணும் எண்டு நினைக்கிற கபட நாடகம்.’

‘ஓ... அப்பிடி என்ன செய்தவன்?’

‘அதை எல்லாம் நினைச்சா இப்பவும் எனக்குப் ‘பனிக்’ வந்திடும்.’ அவள் தனது கையை நிமலனிடம் கொடுத்தாள். அவன் அதில் நடுக்கத்தை உணர்ந்தான். அவள் சொல்வதெல்லாம் உண்மையாக இருக்குமோ என்று யோசித்தான். நடுக்கம் அதைத்தான் சொல்வதாக அவனுக்குத் தோன்றியது.

‘ம்... உன் கஸ்ரம் விளங்குது. ஆனா இப்பிடி எல்லாம் இங்க நடக்கும் எண்டு நான் எதிர்பார்க்க இல்லை.’ என்று கூறிவிட்டு அவளைப் பார்த்தான். அவள் கண் அயரத் தொடங்கினாள். அவன் அதைக் குழப்பாது இங்கிலாங்தின் இயற்கை அழகை இரசிக்கலானான்.

## 3 மஞ்சஸ்ரர்

பேருந்து மஞ்சஸ்ரர் மத்திய பேருந்து நிலையத்தை வந்தடைந்தது. ஏற்கனவே ‘AIR BNB’ ஊடாக நிமலன் ஒரு அறை எய்க்கா என்கின்ற பெண்ணிடம் பதிவு செய்து பணம் செலுத்தி இருந்தான். அதனால் எங்கே தங்கப் போகிறோம் என்கின்ற கவலை அவர்களுக்குக் கிடையாது. அத்தோடு அவரின் சமையல் அறையையும் பாவித்துக் கொள்ளலாம் என்று அவர் தங்கள் ‘AIR BNB’ விளம்பரத்தில் எழுதி இருந்தார். மஞ்சஸ்ரர் பேருந்து நிலையத்தில் இருந்து வாடகை வண்டியில் அந்த வீட்டிற்கு இருவரும் பயணமானார்கள். பத்து நிமிடங்கள் சென்றிருக்கும் அவர்கள் வீடு வந்துவிட்டது. அது ஒரு அடுக்கு வீடுகள் உள்ள பகுதி. இங்கிலாந்தில் எங்கே பார்த்தாலும்

அப்படியான வீடுகளே. அதை இங்கும் பார்ப்பதில் யாருக்கும் வியப்பாக இருக்கவில்லை. வாடகை வண்டியால் இறங்கிப் பயணப் பொதிகளை எடுத்த பின்பு வாடகை வண்டியை முதலில் அனுப்பிவிட்டார்கள். நோர்வேயில் உள்ள வீடுகளின் தோற்றத்திற்கும் அதன் தரத்திற்கும் இங்கு உள்ள இந்த வீடுகளுக்கும் நிறையவே வித்தியாசம் இருக்கிறது. இங்கு உள்ள வீடுகளைப் பார்க்கும் போது அவற்றின் பழமையும், அதை அக்கறையாகப் பராமரிக்காமையும் தெரிவது போல இருந்தது. நிமலன் வீட்டைப் பார்த்துக் கொண்டு நிற்க,

'என்ன அப்பிடியே நிக்கிறியள். போய் கதவைத் தட்டுவம் வாங்க.' என்றாள் வாணி.

'ஓ... வா... வா...' என்ற வண்ணம் பயணப் பெட்டிகளை இழுத்த வண்ணம் நிமலன் முன்னே சென்றான். சென்றவன் அழைப்பு மணியை அழுத்திவிட்டுக் காத்திருந்தான். சிறிது நேரத்தில் எய்க்கா வந்து கதவைத் திறந்தார். அவர் ஒரு ஆப்பிரிக்க குடியேறிகளின் வாரிசு போலத் தோன்றினார். அதைப் பற்றி எல்லாம் நிமலன் எதுவும் கேட்கவில்லை. கேட்கவும் முடியாது. இங்கிலாந்தில் ஆப்பிரிக்காவில் இருந்து வந்தவர்கள் பல பரம்பரையாக வாழ்ந்து வருகிறார்கள். ஆங்கிலேயர்கள் ஒத்துக் கொள்கிறார்களோ இல்லையோ அவர்கள் இங்கிலாந்துக் குடிமக்களே என்பதில் எந்த ஐயமும் கிடையாது. அதை யாரும் இனி மாற்றிவிடவும் முடியாது.

கதவைத் திறந்த எய்க்கா,

'ஓ நிமலன். வாருங்கள்... வாருங்கள். உங்களுக்காகவே காத்திருக்கிறேன். உங்கள் அறை மேலே இருக்கிறது. முதலில் அந்த அறைக்குச் செல்வோம். அங்கே பெட்டிகளை வைத்துவிட்டு உங்களுக்கு வீட்டைச் சுற்றிக் காட்டுகிறேன்.' என்றார். அப்படியே பெட்டிகளைக் கொண்டு சென்று வைத்துவிட்டு வெளியே வந்தவர்களை எய்க்கா கூட்டிச் சென்று அதே தளத்தில் இருந்த கழிப்பறையைக் காட்டினார். பின்பு கீழே கூட்டிச் சென்று குழியல் அறை, சமையல் அறை என்பவற்றைக்

காட்டினார். அதன் பின்பு அவர் ‘நீங்கள் பயணக் களைப்பாய் இருப்பீர்கள்... ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள். நான் பின்பு உங்களுடன் கதைக்கிறேன்.’ என்று கூறிவிட்டுத் தனது அறைக்குள் சென்றுவிட்டார். அதை அடுத்து நிமலனும் வாணியும் தமது அறைக்குச் சென்றார்கள். முதலில் குளித்துவிட்டுப் பின்பு நித்திரை கொள்ளலாம் என்பது அவர்கள் திட்டம். அந்தத் திட்டத்தை அவர்கள் செயற்படுத்தினார்கள்.

*

அடுத்த நாள் காலை எழுந்து முதல் வேலையாக மஞ்சஸ்ரர் மாநகரசபைக்கு இருவரும் சென்றார்கள். மாநகரசபை அமைந்து இருப்பது ஒரு பெரிய பாரம்பரியத்தைத் தன்னகத்தே கொண்ட கருங்கற் கட்டடம். அவள் உள்ளே சென்று கதைத்தாள். நிமலன் அலுவலகத்திற்கு வெளியே நின்று கொண்டான். அவள் என்ன கதைத்தாள் என்பது அவனுக்குத் தெரியாது. அவளுக்கு சில மணித்தியாலத்தின் பின்பு அலுவலகருடன் கதைப்பதற்கு நேரம் கொடுக்கப்பட்டது. அப்போது தான் மட்டும் தனியே சென்று கதைப்பதாக அவள் கூறினாள். தற்போது திருமணம் செய்ததை இங்கிலாந்தில் பதிவு செய்யத் தேவை இல்லை என்றும் அதைத் தவிர்ப்பதால் தனக்கு மாநகரசபை வீடும், செலவிற்குப் பணமும் தரும் என்றும் நிமலனுக்கு அவள் ஏற்கனவே கூறியிருந்தாள். நிமலனுக்கும் அது தெரியும். அத்தோடு அது அவனுக்கும் ஒருவகையில் நல்ல ஆரம்பமாகவும், வசதியாகவும் இருந்தது.

அதன் பின்பு இருவரும் சென்று காலைச் சாப்பாட்டைச் சாப்பிட்டனர். அலுவலகருடான சந்திப்பிற்கு நேரம் இருந்தது. இருவரும் அருகில் உள்ள பல்பொருள் வர்த்தக மையத்திற்குச் சென்றனர். அங்கே தனக்கு அலைபேசி இணைப்பைப் பெற வேண்டும் என்று அவள் நிமலனிடம் கூறினாள். அதைத் தொடர்ந்து அங்கே இருந்த அலைபேசிக் கடையில் கதைத்து அலைபேசி இணைப்பைப் பெற்றுக் கொண்டு மேலும் அங்கே சுற்றித் திரிந்துவிட்டு மீண்டும் மாநகரசபைக்கு அவர்கள் சென்றார்கள். நிமலன் அவளுக்காக வெளியே காத்திருந்தான்.

அவள் மட்டும் இம்முறை உள்ளே சென்றாள். நல்ல வேளையாக நோர்வே போல் இங்கே அவனுக்குக் குளிராய் இருக்கவில்லை.

இரண்டு மணித்தியாலத்தின் பின்பு அவள் வெளியே வந்தாள். எதற்காக அவள் மஞ்சஸ்ரருக்கு வந்திருக்கிறேன் என்பதற்கு அவளிடம் காரணம் இருந்தது. அதைவிட அவளிடம் இங்கிலாந்தின் குடியுரிமை இருந்தது. அதனால் அவளுக்கு அங்கு உதவி பெறுவது கடினமாக இருக்கவில்லை. அதைவிட வேறு என்ன காரணங்களும் அவளிடம் இருக்கும் என்பது நிமலனுக்குத் தெரியாது. மொத்தத்தில் அவளுக்கு வாழ்க்கைச் செலவுக்கான பணம் கொடுப்பதற்கு ஒத்துக் கொண்டாலும் அவளுக்கான தங்குமிட வசதிக்குச் சிறிது காலம் காத்திருக்க வேண்டும் என்று கூறிவிட்டார்கள். இடைக்காலக் குடியிருப்புகளில் இருந்து யாராவது மாறி வேறு எங்காவது போனால் மட்டுமே அங்கே இடம் கிடைக்கும் என்பதாக அவர்கள் கூறி இருந்தார்கள். அதற்கான காத்திருக்கும் பட்டியலில் பதிந்துவிட்டு வந்திருப்பதாக நிமலனிடம் அவள் கூறினாள்.

இருவரும் மீண்டும் தங்கள் இடத்திற்குத் திரும்பிப் போனார்கள். அப்படிப் போகும் போது வீட்டிற்கு அருகில் உள்ள கடையில் சமைப்பதற்கான பொருட்கள் வாங்கினார்கள். அங்கே ஒரு வெளிநாட்டுக்கடை இருந்தது அதற்கு வசதியாகப் போயிற்று. அப்படி வீட்டிற்குப் போகும் போது அவள்,

'நாளைக்கு ஒருக்கா டொக்ரரிட்டை போக வேணும்.' என்றாள்.

'அதுக்கென்ன போனால் போச்சுது.' என்றான் நிமலன்.

வீட்டிற்குச் சென்ற போது அங்கே எய்க்கா இல்லை. அவர் எங்கோ வெளியே சென்றுவிட்டார். அவர் வெளியே சென்றது சமைப்பதற்கு வசதியாக இருக்கும் என்பதால் சமைத்துச் சாப்பிடலாம் என்கின்ற எண்ணத்துடன் இருவரும் சமையல்

அறைக்குச் சென்றார்கள். அங்கே சோறும் சமைத்து, கோழிக் கறியும் வைக்கத் தொடங்கினார்கள்.

‘நீ நல்லாய் சமைப்பாய்… இல்லையா?.’

‘ஓ நான் நல்லாய் சமைப்பன். மகளுக்கும்…’

‘என்ன?’

‘இல்லை. ஒண்டும் இல்லை’

‘இல்லையே… நீ ஏதோ மகளுக்கும் எண்டு சொன்னாய்…’

‘…’

‘உண்மையை ஒரு நாளும் மறைக்க முடியாது. ஏற்கனவே எல்லாத்தையும் விபரமாய் சொல்லி இருக்க வேணும். பருவாய் இல்லை. இப்பவாவது அதைச் சொல்லுகிறது புத்தி. உனக்கும் அவனுக்கும் பிள்ளைகள் இருக்கா?’

‘நான் ஏற்கனவே அதைச் சொல்லாததுக்குச் சொறி. நீங்கள் பிள்ளையும் இருக்குது எண்டா என்ன நினைப்பியளோ தெரியாது எண்டிட்டுச் சொல்ல இல்லை. ஒரு பெம்பிளைப் பிள்ளை இருக்கிறாள். அதுவும் நான் பெரிய கஸ்ரப்பட்டு ‘ஐ.வி.எப்’ மூலம் பெத்தது. ஆனா… அவளையும் தராமல் அவன் என்னைக் கலைச்சுப் போட்டான். அதை எல்லாம் நினைச்சாக் கவலையா இருக்கும். அதுதான் அது பற்றி எல்லாம் கதைக்க இல்லை. சொறி நீங்கள் தப்பா நினைக்காதீங்க.’

‘உனக்கு மகள் இருக்கிறது பிரச்சனை இல்லை. இருந்தாலும் இதை எல்லாம் விபரமாய் சொல்லி இருக்கலாம். ‘ஐ.வி.எப்’ இல பிறந்தது எண்டா நீ கஸ்ரப்பட்டு இருப்பாய். அது சரி உன்னிட்டைப் பிள்ளையைத் தராமல் ஏன் அப்ப அவனோடை

விட்டவங்கள்? அனேகமாக இங்க தாயோடை தானே பிள்ளையை விடுவாங்கள்.'

'பிள்ளையை நான் கடைசியாகக் கூட்டிக் கொண்டு வரமுடியாமல் போச்சுது. அவன் என்னை ஒருநாள் வீட்டுக்க வைச்சுப் பூட்டிப் போட்டுப் போயிட்டான். எனக்குப் 'பனிக்' வந்திட்டுது. ஒரு மாதிரிப் பொலிசுக்கு அறிவிச்சு அவங்கள் வந்து என்னைக் கூட்டிக் கொண்டு வந்திட்டாங்கள். பிள்ளையை அவன் பள்ளிக்கூடத்தில இருந்து கூட்டிக் கொண்டு போயிட்டான். அதுக்குப் பிறகு என்னிட்டை அவளை விட இல்லை. அதாலதான் வெறுத்துப் போய் சிலோனுக்குப் போனனான். அங்க போய் நிம்மதியாய் இருக்கலாம் எண்டால் அம்மாவின்ரை ஆக்கினை தாங்க முடியாமல் தற்கொலை செய்யலாம் போல இருந்திச்சுது. கிழவிக்கு ஏனோ அந்தக் கொழும்பு வீடு என்ரை பெயரில இருக்கிறது பிடிக்க இல்லை. அதை மாத்தி எழுதித் தா எண்டு ஆக்கினை. எனக்கு வந்த கோபத்திற்கு கிழவியின்ரை தலையில எதையாவது தூக்கிப் போடவேணும் போல இருக்கும். என்ன செய்கிறது பெத்த தாய்யாகப் போச்சுது. அந்த ஆக்கினைக்குள்ள இருந்து வெளிக்கிட வேணும் எண்டு நினைச்சன். நல்ல வேளையா நீங்கள் அதுக்குக் கை கொடுத்தியள். இல்லாட்டி எனக்கு அந்தக் கிழவியோடை தொடர்ந்து இருந்திருந்தால் பையித்தியம் பிடிச்சிருக்கும்.'

நிமலன் சொண்டைக் கடித்துக் கொண்டான். அது தற்செயலாகத்தான் நடந்தது. ஏதோ தவறு என்று அவன் எண்ணினான். இவள் பிள்ளை பற்றி இன்று வரைக்கும் எதுவும் சொல்லாது இருந்திருக்கிறாள். அதைப் போல வேறு ஏதாவது இன்னும் சொல்லாது விட்டாளா என்பதும் அவனுக்கு விளங்கவில்லை. கதைத்தால் மட்டுமே அந்த உண்மைகளை அறியலாம் என்பது அவனுக்கு விளங்கியது. அறிந்து இனி என்ன செய்வது என்கின்ற எண்ணமும் அதே கணம் ஏற்பட்டாலும் அறிந்தாலே அதற்கு ஏற்ப வாழ்வைச் சமாளிக்கலாம் என்று அவனுக்குத் தோன்றியது. அதனால் மேலும் அவளிடம் கேட்டு அறிய வேண்டும் என்று அவன் முடிவு செய்தான்.

‘அது சரி… அவன் ஏன் உன்னை வீட்டுக்க வைச்சுப் பூட்டிப்போட்டு வெளிய போனவன்? சரி அவன் பூட்டினால் ஏன் உன்னால உள்ள இருக்க முடியாமல் இருந்திச்சுது? இந்தச் சின்ன விசயத்திற்கு எல்லாம் உனக்கு ஏன் பனிக் வந்தது?’

‘அவனுக்கு என்னைப் பையித்தியம் ஆக்கினால்தானே வீடும் பிள்ளையும் அப்பிடியே அவனிட்டை போகும். அதோடை கொழும்பு வீடும் அவனிட்டைப் போகும்தானே? அவனுக்கு அதில ஒரு கண். அது எல்லாம் அவனிட்டைப் போகாமல் டிவோர்சானால் எனக்குத் தரவேண்டியது தரவேணும். பிள்ளையை என்னோடை விடவேணும். கொழும்பு வீட்டிற்கு எந்த உரிமையும் கோர இயலாது எண்டு நிறையப் பிரச்சனை இருக்குதுதானே? ஒரு வகையில அவன் என்னைப் பையித்தியம் ஆக்கீட்டான் எண்டே சொல்ல வேணும். டொக்ரரிட்டைப் போய் அப்பிடி சேட்பிக்கேற் தரச் சொல்லி கேட்டிருக்கிறான். அவர் அதைக் குடுக்கேல்லை. அதாலதான் அது இழுபட்டுக் கொண்டு வந்தது. சின்னனில இருந்தே என்னத் தனிய விட்டா எனக்குப் பயம். அதெல்லாம் அவனுக்கு நல்லாத் தெரியும். அது எல்லாம் தெரிஞ்சவன் அதைப் பயன்படுத்தி என்னை விசராக்கிற வேலையைக் கொஞ்சம் கொஞ்சமாகச் செய்து கொண்டு வந்தான். அதோடை ‘ஐ.வி.எப்’க்கு நிறையக் கோர்மோன் பாவிச்சதிலையும் சில பாதிப்பு இருக்குமோ தெரியாது. எல்லாம் சேர்ந்து எனக்குத் தனிய இருக்க இயலாது எண்டு அவனுக்கு நல்லாய் தெரியும். அதையே அவன் நல்லா எனக்கு எதிராகப் பாவிச்சான்.

பிறகு நான் சிலோனுக்கு போயிட்டன். நான் கோட்டுக்குப் போகாததால அவனுக்கு டிவோர்ஸ் கிடைச்சிட்டுது. பிறகு அவன் வேறை கலியானமும் செய்திட்டான்.’

‘உனக்கு ஏன் சின்னனில இருந்தே பயம்? ’

‘தெரியாது. ஆனா ஒருக்கா கொழும்பில எனக்குக் காய்ச்சல் வந்து அதைக் கட்டுப்படுத்த முடியாமல் ஐஸ் தலைக்கு வைச்சு கஸ்ரப்பட்டுத்தான் அதைக் குணப்படுத்தினவையாம். அதில

இருந்து எனக்குக் கொஞ்சம் பயம், தடுதாளி, அலமலக்கம் எல்லாம் வரும்.'

'காய்ச்சலுக்கும் பயத்திற்கும் என்ன தொடர்பு?'

'தெரிய இல்லை. சின்ன வயதுதானே... யாரும் அதைப் பற்றிக் கவலைப்பட இல்லை. எனக்கும் அதைப் பற்றி அப்ப விளங்க இல்லை.'

'ம்... அது சரி... ஏன் மகளை உன்னிட்டைத் தராமல் விட்டான்கள்?'

'பள்ளிக்கூடத்தில இருந்து அவன் கூட்டிக் கொண்டு போயிட்டான் எண்டு சொன்னன். அதோடை அவை குடும்பமா இருந்தவை. அதுவும் அவள் அண்ணிக்காரி ஏதோ எல்லாம் சொல்லி என்னிட்டத் தர இல்லை. பாக்கவும் விட இல்லை. ஆனா... சட்டப்படி நான் போய் பிள்ளையைப் பார்க்கலாம். போனால் அவனைப் பார்க்க வேண்டி வரும். அதால எனக்குத் திரும்பத் திரும்ப 'பனிக்' வந்து பையித்தியம் ஆக்கும் எண்டிட்டு நான் போகிறேல்லை. அதோடை அவளும் அப்பாவையும், அப்பாவின்ரை ஆட்களையும் எந்தப் புத்தியும் இல்லாமல் நம்புவாள். அவள் குழந்தைப் பிள்ளைதான். அவளில பிழை இல்லை. ஆனால் என்ரை சிற்றிவேசன் அவளையும் பார்க்க முடியாமல் போயிட்டுது. அதுதான் இங்க இருந்து என்ன செய்கிறது எண்டு சிலோனுக்குப் போனன். அதுவும் அவனுக்கு நன்மையாகத்தான் முடிஞ்சுது. அப்ப வா வா எண்டு அவையும் ஆக்கினைக் கட்டிக் கொண்டு நிண்டுச்சினம். அங்க போனா அது பேயிட்ட இருந்து தப்பிச்சுப் பிசாசிட்டைப் போன மாதிரிப் போயிட்டுது. நீங்கள்தான் ஒரு மாதிரி என்னை அந்தச் சிறையில இருந்து மீட்டு இருக்கிறியள். சிலோன்ல இருந்திருந்தாலும் எனக்கு அம்மாவாலை பையித்தியம்தான் பிடிச்சிருக்கும்.'

'அவனுக்கு நிறையச் சகோதரங்களோ?'

‘ஓ அவங்கள் நாலுபேர். ஒரு பெம்பிளைச் சகோதரம். தாய், தகப்பன், ஊர் எண்டு அது நிறைய. கிட்டத்தட்ட ஒரு ஊரே லண்டனில இருக்குது. ஒரு தம்பி மாத்திரம் அரை லூசு மாதிரி. கலியாணம் கட்டாமல் கோயில் குளம் எண்டு திரிவான். எல்லாரும் வேலை செய்தவங்கள். அதோடை முதலாவது அண்ணி என்ன சொன்னாலும் இவன் அதைக் கேட்பான். அதையே செய்வான். அவதான் ஏதும் பிரச்சனை எண்டா அட்வகேற் மாதிரி வந்து நிற்பாள். அந்த அளவுக்கு அவள் என்ன சொக்குப் பொடி போட்டாளோ எனக்குத் தெரியாது. அவள் இல்லாட்டியே நிறையப் பிரச்சனைகள் வந்து இருக்காது. என்ன செய்கிறது? அவை பெரிய கூட்டுக் குடும்பம் எண்டுகிற பெருமை. பார்ட்டி ஏதும் எண்டா பெரிய அண்டாவில அவிக்க வேணும். இல்லாட்டிப் நிறைய இறைச்சி கொண்டு வந்து வாட்டுவான். அதைவிட அவன், சகோதரங்கள் எல்லாம் ஒரே தண்ணியடி. ரொயிலற்றுக்க, வாத்துறுமுக்க அவன் போனா உடன போக இலாத மாதிரிப் பிண நாத்தம் அடிக்கும். குடிச்சுக் குடிச்சு அவனிட்டை இருந்து அப்பிடி ஒரு நாத்தம். அவனிட்டைக் காசும் நல்லாப் பிளங்கும். அதே நேரம் காசு ஆசையும் அடங்காது.’

‘என்ன வேலை செய்தவன்?’

‘அவன் எலற்றிக் வேலை செய்கிற சொந்தக் கொம்பனி மாதிரி வைச்சிருந்தவன். அதுக்கெண்டு சொந்தமாய் வானும் வைச்சிருந்தவன். அது ஒரு விசியான கொம்பனி மாதிரி இரவு பகலா வேலை செய்து உழைப்பான். ஆனா எப்பவும் காசுப் பிசாசு. இங்க இருக்கிற இரண்டு வீடும் காணாது எண்டு கொழும்பு வீட்டை தன்ரை பெயரில எழுதித் தரச்சொல்லி நெடுக ஆக்கினை. நல்ல காலம் நாங்கள் எழுதிக் குடுக்கேல்லை. குடுத்திருந்தா அதுவும் போயிருக்கும். வேலையை இல்லை எண்டா அவையின்ரை ஆட்கள் இல்லாட்டிக் குடி. அப்ப மகள் அவனிட்டை பெரிசாப் போகமாட்டாள். பிறகு கொஞ்சம் கொஞ்சமா குடும்பமாச் சேர்ந்து என்னைப் பற்றி ஏதோ எல்லாம் சொல்லிச் சொல்லி மாத்திப்போட்டினம். இப்பவும் அவளுக்கு என்னிட்டை வர விருப்பமா இருந்தாலும் அவை விடமாட்டினம்.’

கதைத்துக் கதைத்து கோழிக் கறியும் வைத்துப் பயற்றங்காய் புரட்டலும் செய்து சோறும் சமைத்து முடித்தார்கள். பின்பு இருவரும் இருந்து சாப்பிட்டு முடிய மீதம் இருந்த கறியை குளிர்சாதனப் பெட்டியில் பழுதுபடாது வைத்தார்கள். அதனால் நாளைச் சோற்றைப் போட்டு வடித்தால் சமையல் முடிந்துவிடும் என்கின்ற வசதி. அதன் பின்பு இருவரும் மேலே அறைக்குச் சென்று தங்கள் வேலையில் மும்மரமானார்கள்.

## 4 மருத்துவரிடம்

அவளிடம் பிரித்தானியாக் கடவுச்சீட்டு, பிரித்தானியாத் தேசிய அடையாள அட்டை ஆகியவை கையில் இருந்ததால் அலுவலக விடையங்கள் எந்தப் பெரிய தொந்தரவும் இல்லாது கைகூடி வந்தன. என்றாலும் இங்கிலாந்தில் நோர்வேயைப் போன்று இலகுவாக அலுவல் செய்ய முடியாது என்பதே நிமலனின் அனுபவமாக இருந்தது.

அன்று பத்துமணிக்கு மருத்துவர் வருமாறு கூறியிருந்தார். மருத்துவர் கூறியபடி அங்கே சென்றதும் அவள் நிரப்ப வேண்டிய பத்திரங்களை நிரப்பிக் கொடுத்துவிட்டுக் காத்திருந்தனர். சிறிது நேரத்தில் மருத்துவர் அழைக்க அவள் உள்ளே சென்றாள். கணவன் மனைவி என்றாலும் மருத்துவரிடம் தனித்தே சென்று கதைப்பது இங்கே உள்ள பொதுவான வழக்கம். அது நிமலனுக்கு நன்கு தெரியும் என்பதால் அவன் அமைதியாகக் காத்திருந்தான். அவன் காத்திருப்பு தண்டவாளம் போல இணையாது நீட்டாக இருக்கும் என்று அவன் முதலில் நினைத்து இருக்கவில்லை. அது இணையாது நீண்டு கொண்டு செல்ல எதுவும் செய்ய முடியாதவனாய் அங்கிருந்து அவஸ்தைப்பட்டான்.

கிட்டத்தட்ட ஒரு மணித்தியாலத்தின் பின்பு அவள் வெளியே வந்தாள். வந்தவளை என்ன என்பது போல நிமலன் பார்த்தான். அவள்,

‘ஒண்டும் இல்லை. வாங்க போவம்.’ என்ற வண்ணம் நடந்தாள். நிமலனும் நடந்து அவளோடு வெளியே வந்தான். சிறிது தூரம்

நடந்து சென்றதும் ‘அஸ்ட்டா’ கடையும் அதனோடு சேர்ந்த பல கடைகளும் இருந்தன. அதில் உள்ள ‘அஸ்ட்டா’ கடைக்குள் சென்று தங்களுக்குத் தேவையான பொருட்களை வாங்கிக் கொண்டார்கள். பின்பு வீட்டிற்குப் பொருட்களோடு நடந்து வரும் போது அவளாகவே,

‘உங்களுக்கு நான் அவ்வளவு நேரம் டொக்ரரோடை என்ன கதைச்சுக் கொண்டு இருந்தனான் எண்டு அறிய வேணுமே? அதைச் சொல்லாததில இருந்து கதை கொஞ்சம் குறைஞ்சு போன மாதிரி இருக்குது?’

‘சீச்சீ... அப்பிடி எல்லாம் இல்லை. நான் ஏன் அப்பிடி நினைக்கப் போகிறன்? இது இங்கை வழமையான ஒண்டு தானே? அதைவிட நீ சொல்ல வேணும் எண்டாச் சொல்லுவாய் தானே? பிறகு எதுக்கு நான் கேட்க வேணும்?’

‘ம்.... விழுந்தாலும் மீசையில மண் ஒட்ட இல்லை எண்ட சமாதானம் மாதிரி இது இருக்குது. நான் வந்து எல்லாம் சொல்ல வேணும் எண்டு நீங்கள் எதிர்பார்க்க இல்லையா?’

‘அப்பிடி இல்லை. நீ விருப்பம் எண்டாச் சொல்லலாம். இல்லாட்டி விடலாம். அது உன்னுடைய சுதந்திரம். நான் அதில தலையிட மாட்டன்.’

‘சரி நீங்கள் கேட்காட்டியும் நான் ஒரு விஷயம் சொல்ல வேணும். ஆனா... தயவு செய்து நீங்கள் அதைக் கோவிக்காமல் கேட்க வேணும்.’

‘நான் கோவிக்க என்ன இருக்குது? நீர் சொல்லும்.’

‘நான் அவனோடை லண்டனில இருக்கேக்க ஒரு நாள் எனக்குக் கடுமையா கை கால் உழைவு. கண் பார்வையும் முதல்ல சாதுவாய் கலர் மங்கின மாதிரி இருந்திச்சு. அவன் வேலைக்குப்

போயிட்டான். நான் என்ன செய்கிறது எண்டு தெரியாமல் அந்தரிச்சுப் போட்டு கடைசியா ரைக்சியைப் பிடிச்சுக் கொண்டு டொக்ரரிட்டை போனன். ஆனா அங்க கிட்டப் போகக் கண் பார்வை எல்லாம் மங்கி எது டொக்ரற்றை கதவு எது சுவர் எண்டு தெரியாமல் நிண்டு அழத் தொடங்கீட்டன். அப்ப அங்க வந்த ஒரு ஆப்பிரிக்கன் மனிசிதான் என்னைக் கூட்டிக் கொண்டு போய் டொக்ரரிட்டை விடிட்டுப் போனா. பிறகு டொக்ரர் நிறையச் செக்பண்ணிப் போட்டு எனக்கு 'எம்.எஸ்' (தண்டுவட மரப்பு நோய்) வருத்தம் எண்டு சொன்னார். அதுக்குப் பிறகு நிறைய ரெஸ்ற் பண்ணினாங்கள். எல்லா இடத்திலையும் அந்த வருத்தம் இருக்குது எண்டு உறுதியாச் சொல்லிப் போட்டாங்கள். எனக்கு வேற வழியில்லை. நான் அதோடை வாழ வேண்டியது விதியாப் போச்சுது. ஆனா... அது எனக்கு வாழ்க்கையில இவ்வளவு கெதியாச் சிக்கலைக் கொண்டுவரும் எண்டு அப்ப எனக்குத் தெரியாது.'

'என்ன? நீ சும்மா பகிடி விடுகிறியா? அதோடை இந்த வருத்தம் வெள்ளையளுக்குத் தானே பொதுவா அதிகம் வாறது?'

'நான் ஏன் இவ்வளவு சீதியஸ்சான விசயத்தைச் சும்மா உங்களுக்குச் சொல்லுகிறன்? எனக்கு இலங்கையிலேயே சின்னனில ஒருக்கால் காய்ச்சல் நாற்பதில காய்ஞ்சு கொஸ்பிற்றல்லை தலைக்கு ஐஸ்வைச்சுப் படுக்க வைச்சவங்கள் எண்டு சொன்னன் இல்லையா? அதில இருந்தே இது சாதுவா ஸ்ராட்டாகி இருக்க வேணும். எனக்கு அதைப் பற்றி எந்த அறிவும் இருந்ததில்லை. அப்பா அம்மாவைக் கேட்க வேண்டாம். லண்டனுக்கு வந்த பிறகுதானே நான் எக்கவுண்டனுக்குப் படிச்சன்.

அதுவரைக்கும் நான் பெரிசா எதையும் உணர இல்லை. அப்பிடி ஏதும் இருந்தா நான் படிச்சே இருக்க முடியாது. பிறகுதான் அவையின்ரை ஆக்கினையும் கூடக் கூட வருத்தமும் கொஞ்சம் கொஞ்சமா கூடிக்கொண்டு போகத் தொடங்கி இருக்குது. ஒவ்வொரு தரமும் நான் ஸ்ரஸ் பண்ண அது தன்ரை வேலையை உள்ளால காட்டத் தொடங்கி இருக்குது. இலங்கைக்குப் போன

பிறகு மருந்தும் பாவிக்க இல்லை. இனி ஒழுங்கா மருந்து பாவிக்கத் தொடங்க வேணும் எண்டு டொக்ரர் சொல்லி இருக்கிறார். அதோடை நிறையச் செக்கப்பும் செய்ய வேணும் எண்டு சொல்லி இருக்கிறார்.'

நிமலன் தண்டுவட மரப்பு நோய் பற்றிக் கேள்விப்பட்டு இருக்கிறான். அது பாதித்த பலரைப் பார்த்தும் இருக்கிறான். பலர் தங்கள் வாழ்வைச் சக்கர நாற்காலியில் கழிப்பதும் அவனுக்குத் தெரியும். அந்த நோய் வந்தால் பின்பு அதில் இருந்து தப்பித்துக் கொள்ள முடியாது என்பதும் அவனுக்குத் தெரியும். சிலரை அது மெதுவாகப் பற்றும். சிலரை அது விரைவாகப் பற்றும். எல்லோருக்கும் முடிவு ஒன்றே. அது எவ்வளவு காலத்தில் என்பதே யாருக்கும் தெரியாது. இப்படி இருக்கும் ஒருத்தி எப்படித் துணிந்து என்னை இதற்குள் இழுத்தாள்? இது எனது வாழ்வை பாழ் அடிக்கும் செயல் என்று விளங்கவில்லையா அவளுக்கு? இப்போது அவளால் எல்லாம் செய்ய முடிந்தாலும் அது எவ்வளவு காலம் என்பது யாருக்கும் தெரியாது. இப்போது சிறிது குளிர் என்றாலும் பெரிதும் குளிர்வதாய் அவள் கூறுவாள். சிறிது வெக்கை என்றாலும் அதிக வெக்கை என்று களைந்து எறிவாள்? இது இனி எப்படிப் போகும் என்பது அவனுக்கு விளங்கவில்லை. அதைவிட இன்னும் எதை எல்லாம் தன்னிடம் இருந்து மறைத்து வைத்திருக்கிறாள் என்பதும் அவனுக்கு விளங்கவில்லை. அவன் அவற்றைப் பற்றி இவ்வாறு எண்ணி எண்ணிக் குழம்பினான்.

நிமலனுக்கு ஒருவகையில் அவள் தன்னை ஏமாற்றியதாகவே தோன்றியது. முதலில் மகள் இருந்ததை மறைத்து இருக்கிறாள். பின்பு இப்படியான ஒரு மீளா வருத்தம் இருப்பதை மறைத்து இருக்கிறாள். இது ஒன்றும் தற்செயலாக நடந்தது என்று அவனால் எண்ண முடியவில்லை. இந்தளவு பாரிய விடயங்களை யாரும் தற்செயலாக மறந்துவிட முடியாது. அதுவும் ஒரு விஷயம் இல்லை. இரண்டு விஷயங்கள். அடி நுனி தெரியாது தானே காரியத்தில் இறங்கியது எவ்வளவு தப்பு என்பது இப்போது அவனுக்கு விளங்கியது. இணையம் ஒரு முகம் தெரியாத மனிதர்களின் சங்கமம். அதில் யாரை யார் நம்புவது என்பது நிலக் கண்ணி வைத்த பூமியில் நடப்பது போல. அது தெரிந்தும் அந்த முயற்சியில் ஈடுபட்டிருக்கக் கூடாது. துணிந்து கண்ணி

வெடி வைத்த பூமியில் இறங்கி ஆகிவிட்டது. இனி எப்படி அதில் இருந்து உயிரோடு மீண்டு வருவது என்பது மட்டும் அவனுக்கு விளங்கவில்லை. ஒரு விதத்தில் அவன் மனது குமுறியது. தன்னை ஏமாற்றியதான எண்ணம் அவனுக்கு மேலோங்கியது. இருந்தாலும் அதை அவளோடு இப்போது கதைக்க முடியாது. எப்படி வாழ்க்கை போகிறது என்று பொறுத்து இருந்தே பார்க்க வேண்டும். மருத்துவ மனையில் என்ன சொல்கிறார்கள் என்பதை அறிய வேண்டும் என்று அவன் எண்ணிக் கொண்டான்.

'என்ன பேசாமல் வாறியள்?'

'ஒண்டும் இல்லை.'

'நான் சொல்ல இல்லை எண்டு கோபமா?'

'சொல்லி இருந்தால் நல்லா இருக்கும். நீங்கள் எனக்கு எந்தச் சந்தர்ப்பமும் தர இல்லை. எனக்கு யோசிக்கிறதுக்கு ஒரு சந்தர்ப்பம் தந்திருக்கலாம்.'

'சொறி. உங்களை ஏமாத்த வேணும் எண்ட எந்த நோக்கமும் எனக்குக் கிடையாது. எனக்கும் இலங்கைக்குப் போன பிறகு பெரிசாப் பிரச்சனை இல்லை. அதால இது ஒரு பிரச்சனையாக இருக்காது எண்டு நினைச்சன். அதோடை மகள் இனி என்னிட்டை வரமாட்டாள் எண்டதும் தெரியும். இப்ப அது எல்லாம் ஒரு பிரச்சனை இல்லை எண்டு ஆறுதலாச் சொல்லலாம் எண்டு விட்டிட்டன். சொறி வேறை எந்த எண்ணமும் இல்லை.'

வீடு வந்து விட்டது. எய்க்கா வாசலில் நின்று சிரித்தார். பின்பு,

'பொருட்கள் வாங்கி வருகிறீர்களா?' என்று கேட்டார்.

'ஆம் டொக்ரரிட்டை போயிட்டுப் பொருட்களும் வாங்கிக் கொண்டு வருகிறோம்.' என்று வாணி பதில் கூறினாள்.

‘யாருக்கு வருத்தம்?’

‘எனக்குத்தான்.’

‘என்ன வருத்தம்?’

‘எனக்கு ‘எம்.எஸ்’ இருக்குது.’

எய்க்காவின் முகம் பேயறைந்தது போல மாறிவிட்டது. அதை நிமலன் நன்கு கவனித்தான். அவனுக்கும் அதைக் கேட்க அப்படியே இருந்தது. ஆனால் அவர் தன்னை அவசரமாகச் சமாளித்துக் கொண்டு,

‘ஓ எனது மகளின் அப்பாவிற்கும் அந்த வருத்தமே வந்தது. அவர் இப்போது வேறு வீட்டில் வசித்து வருகிறார். அவரை வருத்தம் கொஞ்சம் கடுமையாகத் தாக்கிவிட்டது. அவரால் இப்போது நடக்க முடியாது. உனக்கு வயது இருக்கிறது. நீ அதிகம் கவலைப்படத் தேவையில்லை.’ என்று ஒரு பொய்யான சமாதானம் கூறினார்.

நிமலன் எய்க்காவின் மகளைப் பார்த்து இருக்கிறான். பார்ப்பாரை மாறாது மயக்கும் பெண் அழகு அவள். அழகில் கறுப்பு, வெள்ளை என்று உண்டா? அது எந்த நிறத்திலும் மின்னும் என்பதற்கு அவள் ஒரு உதாரணம். அவளுக்கு பதினெட்டு வயது இருக்கும் என்று நிமலனுக்குத் தோன்றியது. அவளை வருணிக்கத் தெரியாது வருணித்து அவள் அழகைக் கொச்சைப்படுத்தக் கூடாது என்று அவன் நினைத்தான்.

‘டொக்ரர் வருத்தம் கூடாமல் இருக்க மருந்து தந்திருக்கிறார். இனி ஒழுங்காகப் பாவிக்க வேணும்.’

‘ம்... அதில கவனமா இருங்க.’

‘தாங்ஸ்.’

‘உங்களுக்கு மஞ்சஸ்ரர் பிடித்துக் கொண்டதா?’ என்று நிமலனைப் பார்த்து அவர் கேட்டார்.

‘பிடித்திருக்கிறது. அமைதியான, அழகான இடம். லண்டனைவிட இங்கு இருப்பது மிகவும் பிடித்துக் கொண்டது.’

‘வாணி மிகவும் களைப்பாய் இருப்பார் போல இருக்கிறது. நீங்கள் உள்ளே செல்லுங்கள். நான் எனது உறவினர் வீட்டிற்குச் செல்கிறேன்.’ என்று அவர் காரணம் உணர்ந்து காரியம் ஆற்றினார்.

‘சரி... போய் வாருங்கள்.’

என்று அவருக்கு விடை கொடுத்துவிட்டு இருவரும் சமையல் அறைக்குச் சென்றார்கள். பொருட்களை எடுத்து அவற்றை உரிய இடத்தில் வைத்துவிட்டு வாங்கி வந்த பாலில் வாணி முதலில் தேநீர் தயாரித்தாள். அதைப் பருகிய பின்பு சமைக்கலாம் என்று நிமலனுக்குக் கூறினாள். அவள் கூறுவது மிகவும் சரியாக இருந்தது. வெளியே போய் வந்த களைப்பிற்கு அது நன்றாக இருக்கும் என்பதில் அவனுக்கு எந்த மாற்றுக் கருத்தும் இருக்கவில்லை. அவள் பால் தேநீரைத் தயாரித்து நிமலனுக்குக் கொடுத்தாள். அவன் வாங்கிப் பருகத் தொடங்கினான். மனதில் இருந்த சந்தோசத்தை யாரோ துடைத்து எடுத்தது போல அது சோர்ந்து கிடந்தது. எவ்வளவு பெரிய பொய்கள் என்கின்ற மலைப்பு அவன் மனதில் அசைக்க முடியாத மலையாக எழுந்து நின்றன. இருந்தும் அவளோடு அதற்காகத் தர்க்கப்படுவதில் எந்த அர்த்தமும் இல்லை என்றே அவனுக்குத் தோன்றியது. அதனால் அவன் அமைதியாக மனதில் புழுங்கினான்.

‘என்ன பேசாமல் இருக்கிறியள்? நான் சொல்லாமல் விட்டதில இன்னும் கோபமா?’

‘ஏற்கனவே சொல்லி இருந்தால் நேர்மையாக இருந்து இருக்கும். எனக்கும் யோசிக்க ஒரு சந்தர்ப்பம் கிடைச்சிருக்கும்.’

‘அப்ப நான் நேர்மை இல்லை எண்டுறீங்களா? எனக்கு இது எல்லாம் வேணும். உங்களுக்காக நான் எப்பிடி எல்லாம் காத்திருந்து செலவு செய்து, ஆசையா ஆசையா கலியாணம் செய்தன். எனக்கு வேணும். எல்லாம் என்ரை பிழைதான். ஓ... எல்லாம் என்ரை பிழைதான்.’

என்று கூறிய வண்ணம் அவள் தலையில் அடித்து, வாய்விட்டு அழுதாள். நிமலன் இதை எதிர்பார்க்கவில்லை. தான் கூறியதில் பெரிய பிழை ஏதும் இருப்பதாக அவனுக்குத் தோன்றவில்லை. ஆனால் இப்படி அழுபவளோடு எதிர்த்து வாதம் செய்யவும் அவனுக்கு மனம் வரவில்லை. அவன் விறைத்துப்போய் அப்படியே இருந்தான். அவள் சிறிது நேரத்தில் ஆறுதல் அடைந்தது போல இருந்தது. நிமலனை மீண்டும் சினேகிதமாய் பார்த்தாள்.

‘உங்களை நான் ஒண்டும் வற்புறுத்தமாட்டன். நீங்கள் இப்பவும் எது எண்டாலும் சுயமா யோசிச்சு முடிவெடுக்கலாம். நான் உங்களை ஏமாத்த வேணும் எண்டெல்லாம் நினைக்க இல்லை.’ என்றாள்.

‘அதை விடு வாணி. இப்ப நீ இங்க செலவழிக்க கவுண்சில் காசு தந்தாலும் இருக்கிறதுக்கு வீடு வேணும். நான் திரும்பி நோர்வேக்குப் போகிறதுக்கு முதல்ல உனக்கு வீடு கிடைக்க வேணும். இல்லாட்டி உன்ரைபாடு பெரிய பிரச்சனையாய் போயிடும்.’

‘கவுண்சில் வீடு தரவேணும். அதுக்காகத் திரும்பவும் போய் கேட்டுப் பார்க்கலாம். அப்பதான் சிலவேளை கெதியாத் தருவான்கள். இருந்தாலும் அவங்கள் பிள்ளையளோடை இருக்கிறவைக்குத்தான் முக்கியத்துவம் கொடுப்பாங்கள். எதுக்கும் ஒரு முறை போய் நாங்கள் கேட்க வேணும்..’

'நாளைக்கு நிச்சயம் போவம்...'

அவளுக்குத் திடீரென வந்த கோபம் திடீரெனப் போய்விட்டது. அதைப்பற்றிக் கதைத்து அவளை மேலும் வெறுப்பேற்ற அவன் விரும்பவில்லை. அவளோடு சேர்ந்து சமைத்தான். பின்பு இருவரும் அங்கே இருந்து சாப்பிட்டனர். சாப்பிட்டு முடியவும் வாணி நிமலனைக் கட்டிப் பிடித்து முத்தம் கொடுத்தாள். நிமலனுக்கும் அது தேவைப்பட்டது. அவள் உடல் நல்ல கணகணப்பாய் இருந்தது. இருவரும் மேலே சென்றனர். சங்கமத்திற்கு ஏது மொழி? அதில் சங்கடத்திற்கு ஏது இடம்?

அடுத்த நாள் காலை எட்டுமணி போல் நிமலன் எழுந்து குளித்துவிட்டு அவளைப் பார்த்தான். அவள் தலையைப் போர்வையால் மூடிக் கொண்டு படுத்துக் கிடந்தாள். கொஞ்சம் குளிர் என்றாலும் வளமையாக அவள் காலுக்கு கம்பளித் துப்பெட்டி, கம்பளிக் காலுறை, அதற்குமேல் போர்வை என்று அடுக்குவாள். அதனால் இதுவும் அப்படித்தான் என்று எண்ணிய நிமலன் போர்வையை இழுத்து அவளை எழுப்பினான். அவள் எழுந்திருக்க மறுத்ததால் ஒருவித சந்தேகத்தோடு நெற்றியைத் தொட்டுப் பார்த்தான். அவள் உடல் வெப்பமூட்டி போலக் கொதித்தது. நிமலனுக்கு முதலில் என்ன செய்வது என்று விளங்கவில்லை. பின்பு அவளை மருத்துவ மனைக்குக் கூட்டிச் செல்வதே உத்தமமாக அவனுக்குத் தோன்றியது. நிமலன் அவளுக்கு எழுந்து இருக்க உதவி செய்து அவளைத் தயாராக்கினான். பின்பு ஒரு வாடகை வண்டியை அழைத்து அதில் அவளை ஏற்றி அருகில் இருந்த மருத்துவமனைக்கு அழைத்துச் சென்றான்.

மருத்துவர் உடனடியாக உள்ளே அழைக்கவில்லை. பலர் காத்து இருந்தனர். ஒரு மணித்தியாலம் காத்திருந்த பின்பே உள்ளே அவளை அழைத்தனர். உள்ளே சென்ற பின்பு அவள் வெளியே வருவதற்கு அதிக நேரம் எடுத்தது. சில பரிசோதனையின் பின்பு அவளுக்கு நிமோனியா வந்து இருப்பதாகக் கூறி அதற்கான அன்ரி வயற்றிக் மருந்தும் கொடுத்தார்கள். அத்தோடு மேற்கொண்டு அவளது தண்டுவட மரப்பு நோயைப் பரிசோதிப்பதற்கு வேறு மருத்துவமனைக்குச் செல்வதற்கான

சிபாரிசுக் கடிதமும் கொடுத்தார்கள். அந்த மருத்துவமனை அவர்கள் இருந்த இடத்தில் இருந்து எட்டுக் கிலோமீற்ரர் தூரத்தில் நகரின் மறு பக்கத்தில் இருந்தது.

அதன் பின்பு இருவரும் வீட்டிற்குத் திரும்பத் தயாரானார்கள். அவளுக்கு நிமோனியா என்பதில் நிமலனுக்கு அதிர்ச்சி இல்லை. தண்டுவட மரப்பு நோய் உள்ளவர்களுக்கு அது எப்படியான பாதிப்புக்களையும் உண்டு பண்ணும் என்பது மிகவும் விசித்திரமானது. அது மூளையின் எந்தப் பகுதி பாதிக்கப்படுகிறது என்பதைப் பொறுத்தது. அதே வேளை இது சாதாரணமாய் மற்றவர்களுக்கு வருவது போலவும் வந்திருக்கலாம் என்றும் அவனுக்குத் தோன்றியது.

இருவரும் மீண்டும் ஒரு வாடகை வண்டியைப் பிடித்து வீட்டிற்கு வந்தார்கள். அப்படி வரும்போது என்ன நினைத்தாள் என்பது தெரியாது. நிமலனைப் பார்த்து,

'உங்களுக்கு என்னில கோவமா?' என்று வழமை போல் தொடங்கினாள்.

'ஏன் இப்ப திடீரெண்டு இப்படிக் கேட்கிறாய்?' என்றான் நிமலன்.

'இல்லை நீங்கள் எப்பிடியும் 'எம்.எஸ்' பற்றி உங்களிட்டை நான் சொல்லாமல் விட்டிருக்கிறன் எண்டுதானே நினைப்பியள்?'

'....'

'என்ன பேசாமல் இருக்கிறியள்?'

'நான் ஒண்டும் நினைக்க இல்லை. நீ சும்மாய் இரு.'

'நீங்கள் என்னவும் சொல்லலாம். ஆனா... எனக்கு உங்கடை மனநிலை விளங்கும். உங்களுக்கு இந்தக் கலியாணத்தில

சந்தோசம் இல்லை எண்டா உண்மையைச் சொல்லுங்க. என்னால யாரும் கஸ்ரப்படக் கூடாது எண்டு நினைக்கிறன்.’

‘அதை நினைக்கிறதுக்கு இது சரியான நேரம் இல்லை. தொடக்கத்தில அதாவது முதல் மெயில் அனுப்பின உடன உன்னுடைய நிலமை என்ன எண்டு ஓப்பிணா எல்லாத்தையும் சொல்லி இருக்க வேணும். எனக்கு யோசிச்சு முடிவு எடுக்கிற சந்தர்ப்பத்தை அப்ப தந்திருக்க வேணும். அதை இனித் திருப்பித்தர இயலாது. இனி நடப்பதைப் பார்ப்பம்.’

‘உங்களுக்கு என்னைப் பிடிக்காட்டி நீங்கள் வேறை கலியாணம் செய்யலாம். என்ன சிறிலங்காவுக்குத் திரும்பப் போய் கலியாணம் செய்ய முடியாது. இங்கையும் றிகிஸ்ரர் பண்ண இல்லை. நோர்வேயிலும் றிகிஸ்ரர் பண்ண இல்லை. அதால நீங்கள் சிலோனைத் தவிர வேற எந்த இடத்தில எண்டாலும் கலியாணம் செய்யலாம். குடிகாரன், வெறிகாரன், கிழடுகளுக்கே நல்ல பெம்பிளையள் எல்லாம் கிடைக்கிறாளவை. உங்களுக்கு வடிவான ஒருத்தி வருவாள் எண்டதில எனக்குச் சந்தேகம் இல்லை.’

‘இப்ப நடக்கிறதைப் பார்ப்பமா?’

‘இல்லை உங்கடை நன்மைக்குத்தான் சொல்லுகிறன்.’

‘அதுதானே சொன்னன். அதுக்கான நேரம் இது இல்லை எண்டு.’

‘சரி. நான் இனி அதைப் பற்றி ஆக்கினைக்கட்ட இல்லை. ஆனா... இனி என்னைக் குறை சொல்லக்கூடாது.’

‘நான் உன்னைக் குறை சொல்ல இல்லை. எங்கடை உறவு எப்பிடிப் போகும் எண்டு எனக்குத் தெரியாது. ஆனா... நீ அமைதியா வாழ்கிறதுக்கான எல்லா வசதிகளும் கிடைக்க நீ என்ன என்ன செய்ய வேணுமோ அதுக்கு எல்லா உதவியும்

செய்ய வேணும் எண்டு நான் நினைக்கிறன். உண்மையில உனக்கு அவையால பிரச்சனையா இருந்தா லண்டனை விட்டு வெளியேறி மஞ்சஸ்ரர் மாதிரி இடத்துக்கு வந்து இருக்க வேணும். சிலோனுக்குப் போனதால உனக்குக் கிடைச்சிருக்க வேண்டிய தொடர்ச்சியான சிகிச்சை இடையறுந்து போச்சுது. இனி எண்டாலும் நீ இங்க இருந்து முதல்ல உன்ரை வருத்தத்தைப் பார். பிறகு போகப் போக நடக்கிறதைப் பார்ப்பம்.'

'எனக்கு அப்ப யாரும் இப்பிடி ஐடியாத் தருகிறதுக்கு இருக்க இல்லை. அதோடை அவையும் ஏதோ பெரிய உதவி செய்யப் போகிறது மாதிரிச் சிலோனுக்கு வா வா எண்டிச்சினம். நானும் நல்லா யோசிச்சு இருக்க வேணும். அங்க போனாப் பிறகுதான் அங்கத்தே நிலைமை எனக்கு விளங்கிச்சுது. திரும்பி வருகிறது எண்டா தனிய போகவிடமாட்டம் எண்டு அடம் பிடிக்கத் தொடங்கீட்டினம். நான் என்ன செய்கிறது எண்டு தெரியாமல் அல்லாடிக் கொண்டு இருந்தன். அதில இருந்து நீங்கள்தான் என்னைக் காப்பாத்தி இருக்கிறியள். இனி இவங்கள் வீட்டையும் தந்து காசையும் ஒழுங்காகத் தரத் தொடங்கினா எனக்கு நிம்மதி. எனக்கும் நீங்கள் சொன்ன மாதிரி வேலை செய்ய ஆசைதான். ஆனா... இப்ப நிலைமையைப் பார்க்க அது இனிச் சரிவராது எண்டு நினைக்கிறன்.'

வாடகை வண்டியால் இறங்கி இருவரும் வீட்டிற்குள் சென்றார்கள்.

'உனக்கு வேலை எல்லாம் இனிச் சரிவராது. நீ உன்னுடைய வையித்தியத்தைக் கவனிக்கறதுதான் முதல் அலுவலா இருக்க வேணும்.'

'நீங்கள் சொல்லுகிறது உண்மைதான். எல்லா நாளும் ஒரு மாதிரி இருக்காது. ஒரு நாளைக்குச் சுகமா இருக்கும். மற்றைய நாளைக்கு கை கால் எல்லாம் குத்தி வலிக்கும். இங்க வந்த பிறகு குளிருக்கு அது இன்னும் மோசமா இருக்குது. சிலோன்ல வெக்கைக்கு அது பெரிசாத் தெரிய இல்லை. ஆனா... அங்க இருந்தால் என்னை யார் பார்க்கிறது? யார் கொஸ்பிற்றலுக்குச் செலவழிப்பினம்? இங்க வரவேண்டியது தவிர்க்க முடியாதது.

அதுவும் இப்ப எண்டாலும் சரியான நேரத்தில வந்து பதிஞ்சாச்சுது. அது பெரிய நிம்மதி. எனக்குப் பாதுகாப்பு. என்ன நடந்தாலும் யாரோ வந்து பாப்பாங்கள். எங்கை எண்டாலும் போன் பண்ணிக் கதைக்கலாம். காசு இல்லாமல் தெருவுக்குப் போக வேண்டிய அவசியம் இல்லை.'

'ம்... அது உண்மைதான். உனக்கு இவ்வளவு பிரச்சனை இருக்கும் எண்டு நான் நினைச்சு இருக்க இல்லை. சிலோன்ல பார்க்கேக்க அது பெரிசாத் தெரியவும் இல்லை. இஞ்ச இப்ப நல்லாத் தெரியுது.'

'உங்கடை எதிர்பார்ப்புக்கு உதவியா இருக்க முடியாமல் போனதுக்கு சொறி. எனக்கு இந்த வருத்தம் இப்பிடி எல்லாம் தாக்கத்தை உண்டு பண்ணும் எண்டு தெரியாது. இப்ப அது எனக்கு விளங்குது. எண்டாலும் நான் சமாளிப்பன் எண்ட நம்பிக்கை இருக்குது. இப்பவும் என்னால சமைக்க, மற்ற எல்லா வேலையும் செய்ய முடியும். பிள்ளை மட்டும் பெற முடியாது. அது இனிச் சாத்தியம் இல்லை. அதுக்கு இனி ஒண்டும் செய்ய முடியாது. எற்கனவே ஒரு முறைக்கே நான் பெரிய கஸ்ரப்பட்டன். இப்ப இருக்கிற உடல் நிலையில அது நினைச்சே பார்க்க முடியாது. அதால அது மட்டும் நிச்சயம் இனிச் சாத்தியம் இல்லை எண்டது உறுதி. சில வேளை உங்களுக்குப் பிள்ளையில ஆசை இருந்தால் கஸ்ரம்தான்.'

'நீங்கள் இதுகளைப் பற்றி விரிவா யோசிச்சு இருக்க வேணும். கொஞ்சமாவது இதுகளைப் பற்றி எனக்குச் சொல்லி இருக்க வேணும். இப்ப எல்லாம் காலம் கடந்து போச்சுது. இனி என்ன செய்யலாம் எண்டு யோசிப்பம்.'

'சொறி... இங்க வரவும் குளிருக்கு இப்பிடி வருத்தம் கூடும் எண்டு நான் எதிர்பார்க்க இல்லை.'

'சரி அதை விடு. போய் சமைச்சு ஏதாவது சாப்பிடுவம்.'

‘சரி வாங்க.’

‘லண்டனில நிறைய நடந்திச்சுது. உண்மையில நான் பயந்து போயிட்டன். யாரிட்டையும் வருத்தத்தைப் பற்றிச் சொல்லுகிறது எண்டாலே எனக்குப் பயம். அதை எனக்கு எதிராகவே பயன்படுத்திச்சினம்.’

‘லண்டனில அப்பிடி என்ன நடந்தது?’

‘என்னை விசரி ஆக்க வேணும் எண்டு நிறைய வேலை செய்தவை. சாதாரணமாய் நான் ஒரு இடத்தில ஏதாவது முக்கியமான பொருளை வைச்சா அவன் அதை எடுத்து வேறை இடத்தில மாத்தி வைப்பான். பிறகு யார் இங்க வைச்சது எண்டு கேட்டா நீதான் வைச்சிட்டு பையித்தியம் போல தேடுகிறாய் எண்டு சொல்லுவான். அப்படிச் சொன்னா நான் ரென்சன் ஆகி அப்செற் ஆகுவன் எண்டு அவனுக்குத் தெரியும். இப்பிடி ஒரு நாள் இரண்டு நாள் இல்லை நித்தமும் ஏதாவது செய்வான். நான் ஏற்கனவே வருத்தத்தில நிலையில்லாமல் இருக்கிறன் எண்டு தெரியும். அதைச் சந்தர்ப்பமா வைச்சுக் கொண்டு என்னைப் பையித்தியம் ஆக்கிறதே அவன்ரை முக்கிய நோக்கம். ஒரு நாள் ஆகப் பிரச்சனை தந்தா நான் டிவோர்ஸ் பண்ணுவன் எண்டு சொல்லிப் போட்டன். அதுக்குப் பிறகு நிலைமை இன்னும் மோசமாப் போச்சுது.’

‘எதுக்காக உன்னைப் பையித்தியம் ஆக்க வேணும்?’

‘உங்களுக்கு இவ்வளவுதான் விளங்கிச்சா?’

‘விபரமாச் சொல்லு... எனக்குச் சில வேளை விளங்காது. மொத்த விபரமும் நீ சொன்னால்தானே தெரியும்.’

‘அவனுக்கு இரண்டு வீடு இருக்குது. எங்களுக்குப் பிள்ளையும் இருக்குது. டிவோர்ஸானா வீடு பிள்ளை எண்டு எனக்கு

வரவேண்டியது இருக்குதுதானே? ஆனால் என்னைப் பையித்தியம் ஆக்கினால் அதில எல்லாம் பங்கு குடுக்கத் தேவை இல்லை எண்ட ஐடியா? இப்ப விளங்குதா?'

'ஓ... அவ்வளவிற்கா...?'

'அதைவிட நிறைய அவை செய்வினம். அவையோடை இருந்தால்தான் அவைய விளங்கிக் கொள்ள முடியும். அதுக்கு ஏத்த மாதிரி ஆலோசனை சொல்ல அண்ணி, அண்ணா, அம்மா எண்டு ஒரு ஊரே அங்க இருக்குது.'

'இந்த அளவுக்கு இருக்கும் எண்டு நான் நினைக்க இல்லை.'

'இதுகளை எல்லாம் எடுத்தவுடன எப்பிடிச் சொல்லுகிறது? எல்லாத்துக்கும் காலம் நேரம் சரியாய் வரவேணும் தானே?'

*

சில நாட்களின் பின்பு 'ஸ்ரால்போட்டில்' இருக்கும் நரம்பு வைத்தியசாலைச்கு இருவரும் சென்றார்கள். அங்கே முக்கியமான ஒரு நரம்புப் பரிசோதனை மருந்து உடலிற்குள் செலுத்திய பின்பே செய்ய வேண்டும் என்பதால் அங்கே தங்கி இருந்து அந்த வைத்தியம் செய்ய வேண்டும் என்றார்கள். அன்று முதல் நாள் என்பதால் சில வேறு பரிசோதனைகள் செய்து அதைப் பற்றி முதலில் கதைத்தார்கள். அப்போது தண்டுவட மரப்பு நோய் இரண்டாம் கட்டத்திற்குப் போய்விட்டதாகவும், மருந்துகளை ஒழுங்காக எடுக்காததால் அதன் பாதிப்புக் கூடிவிட்டதாகவும் அவளிடம் கூறினார்கள். அத்தோடு அவர்கள் ஒரு கிழமை கழித்து வருமாறு அவளுக்குத் திகதி கொடுத்து அனுப்பி வைத்தார்கள்.

இரண்டாவது கட்டத்திற்கு நோய் அவளுக்குச் சென்றுவிட்டது என்பது நிமலனுக்கு வேதனையையும், விரத்தியையும், ஏமாற்றத்தையும் தந்தது. இவ்வளவு முற்றிய பின்பு எதற்காகத்

தன்னை இதற்குள் மாட்டி வைத்தார்கள் என்கின்ற எண்ணம் மீண்டும் மீண்டும் தோன்றியது. எதையும் அவளோடு நேரடியாக விவாதிக்க முடியாது. அப்படி விவாதிக்கத் தொடங்கினால் அவள் அழத் தொடங்கிவிடுவாள். அத்தோடு ஒரு வருத்தக்காரியைத் தொந்தரவு செய்யவும் அவனுக்கு விருப்பம் இல்லை. ஆனால் அதே நேரம் தனது வாழ்க்கை வீணடிக்கப்பட்டதான உணர்வு அவனை வாட்டியது. தான் வாழ வேண்டும் என்கின்ற சுயநலத்தால் ஒரு திருமணம் செய்திருக்கிறாள் என்று அவன் எண்ணினான். கடைசியில் தனது விதியாக வருத்தக்காரியைப் பார்க்கும் வேலைக் கிடைத்திருப்பதாக அவனுக்குத் தோன்றியது.

*

காலம் சிலருக்குக் கடுகதியில் பயணிக்கும். சிலருக்கு அது அசையாது நிற்பதாய் தோன்றும். அவரவர் மனதையும் அதன் ஈடுபாட்டையும் பொறுத்தது அது. ஒருவாறு வாணிக்கு அறை ஒன்று கிடைத்தது. அதனால் அவள் உடனடியாகப் புறப்பட வேண்டி இருந்தது. அவளது பொருட்களை எல்லாம் ஒழுங்காக அடுக்குவதற்கு உதவி செய்து, வாடகை வண்டியில் ஏற்றி அவளை அழைத்து வந்து புதிய வீட்டில் இறக்கிவிட்டு நிமலன் திரும்பித் தனது அறைக்கு வந்தான். அவன் நோர்வேக்குப் போகும் வரைக்கும் அவள் இங்கு வந்து போவாள் என்று அவனிடம் கூறியிருக்கிறாள். ஆனால் அவன் அங்கே செல்ல முடியாது. வெளியாட்கள் அங்கே செல்வதற்கு அல்லது தங்குவதற்கு அங்கே தடை செய்யப்பட்டுள்ளது. அந்த இடத்தை விட்டால் பின்பு வேறு இடம் கிடைப்பதற்குப் பல மாதங்கள் செல்லும். அதனால் அவள் உடனடியாகப் புறப்பட்டுச் செல்ல வேண்டி வந்தது.

அதன் பின்பு அவள் இல்லாத போது அனேகம் இரவு வேளைகளில் அவன் தனிமையில் விடப்பட்டான். அது அவன் எண்ணங்களின் விளைநிலம் ஆகியது. அத்தால் அவனுக்கு மிகவும் யோசனையாக இருந்தது. என்ன செய்வது என்று எதுவும் அவனுக்கு விளங்கவில்லை. அவள் ஒரு வருத்தக்காரி என்பதால் அவளை இதற்கு மேல் குடைய முடியாது என்பதும் அவனுக்கு விளங்கியது. அதற்காகத் தனது வாழ்வை இப்படி வீணடிப்பது

புத்திசாலித்தனமா என்பது அவனுக்கு விளங்கவில்லை. அவனுக்குத் தான் நினைத்தது ஒன்று நடந்தது ஒன்று என்பது மட்டும் நன்கு தெளிவாகியது. இருந்தும் இனி என்ன செய்வது என்பது விடை காண முடியாத குழப்பமாய் தொடர்ந்தது. ஒரு வகையில் இனி அவள் தன் எதிர்காலத்தை எண்ணிக் கவலைப்படத் தேவை இல்லை என்பது சிறிய சந்தோசத்தை உண்டு பண்ணியது. எப்படியானாலும் நிமலன் தனது எதிர்காலத்தைப் பற்றி ஆழமாகச் சிந்திக்க வேண்டும் என்று நினைத்தான்.

எதுவாக இருந்தாலும் வாணி காரியத்தில் கெட்டிக்காரி என்பது நிமலனுக்கு நன்கு விளங்கியது. வரும் பொழுது பத்தாயிரம் பவுண்ஸ் பணமாகக் கொண்டு வந்தாள். இப்படியான வீட்டிற்குப் போகும் போது அதன் பாதுகாப்பு பற்றி தன்னிடம் ஏதாவது அவிப்பிராயம் கேட்பாள் என்று அவன் எதிர்பார்த்தான். வாணி அப்படி எந்தத் தவறும் செய்யவில்லை. அவளுக்கு அந்தப் பணத்தை தான் காப்பாற்றிக் கொள்வேன் என்கின்ற நம்பிக்கை இருந்தது. அதை அவள் தன்னோடு எடுத்துக் கொண்டு சென்றுவிட்டாள். அப்படிச் செய்தது நிமலனுக்கு ஒரு மாதிரியாக இருந்தது. தன்மீது அவளுக்கு எவ்வளவு நம்பிக்கை இருக்கிறது என்கின்ற கேள்வியை அவனிற்குள் அது எழுப்பியது. ஆக மொத்தத்தில் தன்னை நன்கு பாவித்திருப்பதான எண்ணம் அவனிடம் மேலோங்கியது. இலங்கையில் பதிவுத் திருமணம் செய்திருக்காவிட்டால் இந்த உதவியில் எந்தப் பிரச்சனையும் அவனுக்கு இருந்து இருக்காது. நிமலன் அப்படித்தான் முதலில் கேட்டான். வாணி திருமணம் செய்யாது அப்பா, அம்மா எங்கும் புறப்பட விடமாட்டார்கள் என்று அதற்கு மறுத்துவிட்டாள். அதனால் அவனுக்கு வேறு வழி இருக்கவில்லை. ஆனால் அவள் உண்மையைச் சொல்லி இருக்கலாம். இவ்வளவு பெரிய பிரச்சனையை வைத்துக் கொண்டு அப்படிச் செய்திருக்கக் கூடாது. அப்படிச் செய்தது அவளுக்குப் பிரச்சனையாக இல்லாவிட்டாலும் நிமலனுக்குப் பிரச்சனையாக இருக்கப் போகிறது என்பது அவனுக்கு விளங்கியது. அவனால் இனிச் சாதாரணமாகவும் வாழ முடியாது. சரியான முடிவும் எடுக்க முடியாது என்பது போலத் தோன்றியது.

*

அடுத்த நாள் காலை இருவரும் பேருந்தில் ஏறி 'பிக்கட்லீ கார்டன்'க்குச் சென்றார்கள். முதலில் அங்கிருந்த பேக்கரியில் காலைச் சாப்பாட்டை முடித்துக் கொண்டு மேற்கொண்டு சிறிது தூரம் சென்று 'மன்செஸ்ரர் ஆர்ன்டால்' பல்லங்காடியைச் சென்றடைந்தனர். பின்பு அங்குள்ள ஒவ்வொரு கடையாக ஏறி இறங்கத் தொடங்கினார்கள். இடையில் வாணி தனக்குக் கால் உளைவதாகக் கூறியபடி அங்கிருந்த இருக்கை ஒன்றில் அமர்ந்து கொண்டாள். அதனால் நிமலனும் வேறு வழி இன்றி அங்கு அமர்ந்து இருந்தான். அப்படி இருந்த வாணி சிறிது நேரத்தில் ஏதோ நினைவு வந்தவளாக,

'நாங்கள் வீட்டை போவமா?' என்றாள்.

'ஏன் என்ன அவசரம்...? ஆறுதலா இருந்திட்டுப் போவம்.' என்றான் நிமலன்.

'அப்ப போய் சமைக்க வேண்டாமே? பிறகு நான் ஆறுதலா அறைக்குப் போக வேணும் எல்லே?'

'நீ சொல்லுகிறது சரிதான். ஆனா... நான் மத்தியானம் பீச்சா சாப்பிட்ட பிறகு ஆறுதலா வீட்டைப் போகலாம் எண்டு நினைக்கிறன்.'

'அப்பிடியா உங்கடை ஐடியா? அப்பிடி எண்டா எனக்கு அதில எந்தப் பிரச்சனையும் இல்லை.'

'அப்ப ஒரு அவசரமும் எங்களுக்குத் தேவையில்லை. ஆறுதலாக இருந்திட்டுப் போகலாம்.'

'தாங்ஸ்.'

அதைத் தொடர்ந்து அவள் ஏதோ யோசித்துக் கொண்டு இருந்தாள். அதைப் பார்த்த நிமலன்,

‘என்ன தொடர்ந்தும் யோசினையா?’ என்றான்.

‘இல்லை... இன்னும் இரண்டு நாளில நீங்கள் நோர்வேக்குப் போயிடுவியள். அதுதான் யோசினையா இருக்குது. நான் இனித் தனிச்சுப் போயிடுவன். அதை நினைக்கப் பயமா இருக்குது. லண்டனில அவனும் அவன்ரை ஆட்களும் பிரச்சனை. இங்க ஒருத்தரும் இல்லை எண்ட பிரச்சனை.’ என்றாள் அவள்.

‘இங்க ஒருத்தரும் இல்லை எண்டில்லை. நாங்கள்தான் இன்னும் ஆட்களைச் சந்திக்கேல்லை எண்டு நினைக்கிறன். கெதியா இங்க இருக்கிற ஆட்களைச் சந்திப்பீர். அப்ப உனக்கு மஞ்சஸ்ரர் ஆறுதலாகவும், வசதியாகவும் இருக்கும்.’

‘உங்கடை சொல்லுப் பலிக்க வேணும். அப்பதான் எனக்கு மனநிம்மதியாக இருக்கும்.’ என்றாள்.

‘சரி நீ கவனமாய் இரு. உன்னுடைய சொத்துக்களைக் கவனமாய் வைச்சிரு. பலரும் இருக்கிற இடம் அது. கவனம் தேவை.’ என்று கூறிப் புன்னகை புரிந்தான் நிமலன்.

‘நீங்கள் சிரிக்காதேங்க. என்னுடைய சொத்து என்னோடையே இருக்குது.’ என்று கைப்பையைக் காட்டினாள்.

‘ஓ... நீ கெட்டிக்காரிதான். எண்டாலும் உதுவும் ஆபத்து. நீ உதைக் கவனமாய் கொண்டு திரிய வேணும். எதுக்கும் முதுகில கொழுவுகிற பை ஒண்டு வாங்கி வைச்சிரு. அது எதுக்கும் வசதியாய் இருக்கும். அதை முன்பக்கமாயும் கொழுவலாம்தானே? அப்ப யாரும் முன்னுக்கு வந்து லேசில கைவைக்க மாட்டாங்கள். எப்பிடி என்ரை ஐடியா?’

‘உங்கடை ஐடியா நல்லா இருக்குது. கான்வாய்க் கொழுவிக் கொண்டு திரியக் கையும் உளையுது. நான் ஒரு புது வாய்க்கு வாங்கத்தான் வேணும். அதுக்கு நாளைக்குப் போயிட்டு வருவமா?’

‘பிரச்சனை இல்லை... நாங்கள் நாளைக்குப் போகலாம்.’

‘அதுக்கு அடுத்த நாள் நீங்கள் போயிடுவியள்.’

‘ம்... அதுக்கு இப்ப ஒண்டும் செய்ய முடியாது. நான் போயிட்டு வருவன் தானே? அதோடை எயார்ப்போட்டிற்கு பஸ்சிலதான் போக வேணும்.’

‘வஸ் எடுத்து ஏயார்ப்போட்டுக்குப் போகிறது பிரச்சனை இல்லை. இனி நீங்கள் வரும் வரையும் காத்திருக்கிறதை நினைக்கத்தான் கவலையா இருக்குது. நாட்களை எண்ணிக் கொண்டு இருக்க வேணும்.’

‘கவலைப்படாத... காலம் கெதியாகப் போயிடும்.’

‘உங்களுக்குப் பருவாய் இல்லை. அங்க ஆட்கள் இருக்கினம். எனக்குத்தான் தனிமையில இனிமை காணமுடியுமா எண்ட நிலை.’

‘உனக்கு நிரந்தரமா வீடு கிடைச்ச பிறகு நானும் வந்து தங்கலாம்தானே? அப்ப அடிக்கடி வரலாம். இப்போதைக்கு நான் தங்க வாடகைக்குத்தான் இடம் எடுக்க வேணும். கொஞ்ச நாளைக்குச் சமாளிப்பம்.’

‘ம்... நீங்கள் சொல்லுகிறது சரிதான். கவுன்சில் வீடு தந்திட்டா நீங்கள் வந்து என்னோடை தங்கலாம். அப்ப தங்குகிற பிரச்சனை தீர்ந்திடும். அதுவும் கெதியாகத் தருவாங்கள் எண்டு நினைக்கிறன்.’

‘ம்... உனக்கு வருத்தம் எண்டுகிறதால கெதியாகத் தருவாங்கள் எண்டு நினைக்கிறன். அது ஒரு பெரிய பிரச்சனையாக இருக்காது.’

*

இருவரும் புறப்பட்டு மஞ்சஸ்ரர் விமான நிலையத்திற்குச் சென்றார்கள். பேருந்து பழைய முகப்பின் அருகே நின்றது. அங்கிருந்து நடந்து இருவரும் சென்றனர். பின்பு ஆகாயப் பாலத்தைக் கடந்து மறுகரைக்குச் சென்றார்கள். அவள் அத்தோடு நின்று கொண்டாள். அவள் கண்கள் கலங்கி இருந்தன. அதைப் பார்க்க நிமலனுக்குச் சங்கடமாய் இருந்தது. அவன் அவளை அணைத்து முத்தம் கொடுத்தான். அதில் எவ்வளவு காதல், எவ்வளவு கருணை இருந்தது என்பதில் அவனுக்குத் தொடர்ந்தும் குழப்பமாகவே இருந்தது. நேரம் ஆகிக் கொண்டு இருந்ததால் அவள் கையை மெதுவாக விடுவித்துக் கொண்டு அவன் மேற்கொண்டு நடந்தான். அவள் வந்த வழியே திரும்பி நடக்கத் தொடங்கினாள்.

‘என்ன செய்வது?’ நிமலன் தனக்குள் வினாவிய வண்ணம் மேற்கொண்டு நடந்தான். கவலையும் விடுதலையும் கலந்ததான ஒரு கலவை உணர்வு அவன் மனதில்.

## 5 அடுத்த சந்திப்பு

இரண்டு மாதங்கள் இமைக்கும் பொழுதாய் கரைந்து போய்விட மீண்டும் நிமலன் மஞ்சஸ்ரருக்குப் பயணமானான். விமானத்தால் இறங்கி வெளியே நடந்து வந்து ஆகாயப் பாலத்தால் அடுத்த கரைக்கு வந்தபோது பாரம் தூக்கிக்கு முன்னே அவள் நின்றாள். அவள் முதலில் தான் கீழே நிற்கிறாள் என்றே அவனுக்குக் குறும் செய்தி அனுப்பி இருந்தாள். அதனால் அவள் இங்கு நிற்கமாட்டாள் என்கின்ற ஒரு அவிப்பிராயத்துடன் அவன் வந்தான். அதைவிட அவள் உருவம் அடையாளம் தெரியாத அளவிற்கு அந்த இரண்டு மாதத்தில் மாறி இருந்தது. அதனால் அவள் நின்றதை அவன் நிதானிக்கவில்லை. அவளை முதலில்

நிமலன் அடையாளம் தெரியாது ஒரு கணம் முன்நோக்கி நடக்க நினைத்தான். பின்பு தன்னை நிதானப்படுத்தி, தன் பிழையை உணர்ந்து, எதுவும் செய்ய முடியாது வழிந்தான். அவள் அதைப் பார்த்து விட்டு,

‘என்ன நான் நிக்கிறது உங்கடை கண்ணுக்குத் தெரிய இல்லையே? இல்லாட்டி என்னையே மறந்து போயிட்டியளோ?’

‘அப்பிடி இல்லை. நீ இங்க நிற்பாய் எண்டு நான் எதிர்பார்க்கேல்லை.’

‘அப்பிடி எண்டாச் சரிதான்.’

‘அது சரி நல்லாச் சொக்ளேற் சாப்பிடுகிறீர் போல இருக்குது?’

‘ஏன் அப்பிடிக் கேட்கிறியள்?’

‘இல்ல உடம்பு அப்பிடித்தான் சொல்லுது.’

‘எனக்கு அப்படித் தெரியேல்ல.’

‘ஒவ்வரு நாளும் உன்னையே நீ பார்த்தால் உனக்கு எப்பிடி அது தெரியும்? அப்படித் தெரியோணும் எண்டா நிறுத்துத்தான் பார்க்க வேணும்.’

‘அவ்வளவுக்கு நான் ஊதி இருக்கிறனா?’

‘அங்க இருந்து வந்ததுக்கு நிறைய ஊதி இருக்கிறாய் எண்டுதான் சொல்ல வேணும்.’

‘அங்க மாதிரிச் சாப்பாட்டிற்கு இங்க என்ன பஞ்சமா? நினைச்சதை நினைச்ச உடன வாங்கிச் சாப்பிடலாம். அதோடை

இடைக்கிடை சொக்கிளேற்றும் சாப்பிடுவன். அதைவிட இங்க ஓடியாடித் திரிகிறதும் குறைவு. அதுக்குத் தேவையும் இல்லை. அப்படித் திரிஞ்சாலும் கைகால் உளையும். நடக்கிறதுக்கு உடம்பில சக்தியே இல்லாத மாதிரி இருக்கும்.'

'அது எல்லாம் சேர்ந்து கிலோ ஏறி இருக்குது. சரி நட... வஸ்சைப் போய் பிடிப்பம்.'

'எனக்கு உங்கடை நினைவாகவே இருந்திச்சுது. நீங்க போனும் ஒழுங்காக் கதைக்க மாட்டியள். வேலை... வேலை... எண்டு ஓடுவியள். நல்ல காலம் இப்பவாவது நேரம் கிடைச்சுதே.'

'வேலை எண்டா அப்பிடித்தான். அதைவிட நண்டு ஒண்டைப் பார்க்க வேணும். அப்ப நான் விசியாகத்தானே இருப்பன்?'

'உங்கடை பிரச்சனையும் எனக்கு விளங்குது. எண்டாலும் எனக்கும் உங்களால இயன்ற அளவில நேரம் ஒதுக்குங்க.'

'சரி நான் றைபண்ணுகிறன். வீட்டு அலுவல் எல்லாம் என்ன மாதிரி இருக்குது? எப்ப தருவாங்களாம்?'

'தெரிய இல்லை. நான் முதல்ல அறை கிடைச்ச மாதிரி இதுவும் கெதியாக் கிடைக்கும் எண்டு நினைச்சு இருந்தன். ஆனா... அது இப்ப இழுபடுகுது. இனி வீடு கிடைச்சாலும் தளபாடம், பெயின்ற் எண்டு நிறையச் செலவுகள் இருக்குது. எல்லாத்தையும் சமாளிக்க வேணும். அவங்கள் தாற காசு பத்தாது... என்ரை காசையும் போட்டுத்தான் செலவு செய்ய வேணும்.'

'அதுக்குக் கனக்கச் செலவழியுமே?'

‘அது எப்பிடி வீட்டின்ரை கொண்டிசன் இருக்குது எண்டதைப் பொறுத்தது தானே? நல்ல வீடாக் கிடைச்சாச் செலவு குறைவா இருக்கும்.’

‘பயப்பிடாதை... நல்ல வீடாய்த்தான் கிடைக்கும்.’

‘உங்கடை வாக்குப் பலிக்கட்டும்.’

இருவரும் பேருந்தில் ஏறி நிமலன் எடுத்திருந்த அறைக்குச் சென்றனர். அது ஒரு ஆங்கிலேயப் பெண்ணின் வீடு. மேலே உள்ள ஒரு அறையை வாடகைக்கு விட்டிருந்தார். அதன் அருகே குளியல் அறையும் இருந்தது. கீழே சமையல் அறையும் அதன் தொடராக ஒரு விறாந்தையும் இருந்தது. விறாந்தை என்றால் திறந்த விறாந்தை அல்ல அது. அது கண்ணாடிக் கதவுகளால் அடைக்கப்பட்ட விறாந்தை. முதல் வீடு போலவே இங்கும் சமையல் அறையைப் பாவிக்கும் சுதந்திரம் அவர்களுக்கு இருந்தது.

நிமலன் ஆர்வத்தோடு வீட்டிற்கு வந்து இருந்தான். அவளும் ஆர்வத்தோடு இருந்து இருக்க வேண்டும். அத்தால் நடந்தேற வேண்டியது நடந்தேறியது. அவளால் முன்பு போல இப்போது அதிகம் விரைவாக இயங்க முடியவில்லை. கை கால் இயக்கங்களில் வேகம் குறைந்து இருந்தது. அது ஒரு பெரிய குறை இல்லை என்பதே நிமலனின் அப்போதைய எண்ணம். இருந்தும் இது எந்தத் திசையில் போகும் என்பதை எண்ணப் பயமாக இருந்தது. என்றாலும் நிமலன் அதைப் பற்றி எதுவும் அவளோடு கதைக்கவில்லை. கதைப்பதால் மேலும் வருத்தத்தைக் கூட்டுவதைத் தவிர வேறு எதுவும் செய்ய முடியாது என்பது அவன் எண்ணம்.

சிறிது நேரத்தின் பின்பு இருவரும் குளித்துவிட்டு வெளியே புறப்பட்டுச் சென்றார்கள். அவர்களின் வீட்டிற்குச் சிறிது தூரத்தில் ஒரு பல்லங்காடி இருந்தது. அதற்குள் சென்று தங்களுக்குத் தேவையான சில பொருட்களை வாங்கிக் கொண்டு

திரும்பி வந்து மறுகரையில் இருந்த அரேபியன் கடை ஒன்றில் பீச்சா ஒன்று வாங்கிக் கொண்டு வீட்டிற்கு வந்தார்கள்.

அப்போது ஒரு பையைக் கொண்டு வந்த அவள் தனது வலது கை மரத்துப் போய்விட்டதாகக் கூறினாள். நிமலன் அவசரமாக அதை வாங்கிக் கொண்டான். மறு கையில் அவனிடம் பீச்சா இருந்தது. அதை வாங்கிய பின்பு அவன் அவளைப் பார்த்து,

'இப்ப எப்பிடி இருக்குது?' என்றான்.

'அப்பிடித்தான் இருக்குது. கொஞ்சம் கொஞ்சமாய் விடும். எனக்கு இப்ப சிலவேளை உடம்பில சக்தியே இல்லாத மாதிரி இருக்கும். இங்க வந்த பிறகு அது நல்லாய் தெரியுது.'

'ம்... குளிருக்கு அனேகமா உந்த வருத்தம் கூடுதலாகத்தான் காட்டும். சிலோன்ல கொஞ்சம் அடக்கமா இருந்திருக்கும். ஆனா... நீ சிலோன்ல இருந்தா உன்னை யார் பார்க்கிறது? அங்க மனிசரை வருத்தம் எண்டாப் பார்க்கிறதுக்கு எந்தச் சிஸ்ரமும் கிடையாது. அதால உனக்கு இங்க வாறதைத் தவிர வேற எந்த வழியும் இல்லை. அதோடை உனக்கு வருத்தம் இப்ப கொஞ்சம் முத்தின நிலையில இருக்கிறதால எப்பவும் உதவி தேவைப்படும். அதுக்கு இங்க இருந்தால்தான் சரி.'

'ம்... நீங்கள் சொல்லுகிறது உண்மைதான். நான் கடைசியில எப்பிடி வெளிக்கிடுகிறது எண்டு தெரியாமல் தவிச்சுக் கொண்டு இருந்தன். அம்மா வேறை என்னுடைய சிற்றிசன்சிப்ப மாத்த நினைச்சா. நல்ல காலம் நான் அதில அக்கறைப்பட இல்லை.'

'ஒரு தத்தில இருந்து தப்பின மாதிரி... உனக்கு ஒரு நல்ல காலம் இருந்திருக்குது.'

'உண்மைதான். நீங்கள் என்னைக் காப்பாத்தீட்டியள்.'

‘ஆனா… நான்தான் மாட்டுப்பட்டிட்டன்.’ என்று சொல்ல வேண்டும் போல் இருந்தது நிமலனுக்கு. என்றாலும் அவன் அதை வெளியே சொல்லவில்லை. சொல்ல முடியாது. சொன்னால் தேவை இல்லாது காயப்படுத்துவதாய் மட்டும் இருக்கும் என்பது அவனுக்கு விளங்கியது.

அதன் பின்பு அந்தச் சிறிய விடுமுறை மிக விரைவாக முடிந்துவிட்டது. நிமலன் மீண்டும் நோர்வேக்குத் திரும்பினான்.

*

நிமலன் நோர்வேக்குத் திரும்பி வந்த பின்பு அவள் அடிக்கடி அலைபேசியில் தொடர்பு கொண்டாள். வீடு, வேலை, மகள், சமையல் என்று எல்லாவற்றையும் பார்க்கும் அவனுக்கு அவள் அப்படி அடிக்கடி தொடர்பு கொண்டது ஏனோ பிடிக்கவில்லை. அதற்கு அவன் உள் மனதில் அவள் உண்மையை மறைத்து ஏமாற்றிவிட்டாள் என்கின்ற எண்ணம் பதுங்கி இருப்பதும் ஒரு காரணம் என்பதும் விளங்கியது. அதை அவன் விவாதிக்கா விட்டாலும் அவனால் மன்னிக்க முடியும் என்று தோன்றவில்லை. அவளது வருத்தத்தை எண்ணி இயலுமானவரைக்கும் சமாளித்துப் போக வேண்டும் என்றே நினைத்தான். அவள் தொடர்ந்தும் அலைபேசியில் அழைப்பது அவனுக்குள் சினத்தை விளைவித்தது. அவன் என்ன நினைத்தாலும் உள் மனது அவன் அறியாதே மனைந்தது. அவன் அதை புறந்தள்ளித் தன் வாழ்வை முன் நகர்த்த முயற்சித்தான்.

## 6 தாய் நாட்டிற்கு

நிமலன் அவனது மைத்துனன் ஒருவன் இலங்கையில் தற்கொலை செய்ததால் அந்தச் செத்த வீட்டிற்குப் போக வேண்டி வந்தது. நிமலன் அதற்குக் கட்டாயம் போக வேண்டுமா இல்லையா என்று சிந்திக்கும் அவகாசம் இல்லாது அவனது சகோதரங்கள் பிரான்சில் இருந்து செல்வதால் அவனுக்கும் சேர்த்து விமானப் பயணச்சீட்டு ஒழுங்கு செய்துவிட்டார்கள். அதன் பின்பு வேறு வழி இன்றி அவன் அவர்களோடு புறப்பட்டான். முதலில் அதை

வாணியிடம் கூற வேண்டாம் என்று நினைத்தான். பின்பும் அது சரி இல்லை என்பதால் அவளைத் அலைபேசியில் தொடர்பு கொண்டு கூறிவிட்டுச் சென்றான். வாணி அதைத் தகப்பனோடு கதைக்கும் போது யதார்த்தமாகக் கூறிவிட்டாள். அதைத் தொடர்ந்து அவள் தாய் அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி வாணியின் பெயரில் கொழும்பில் இருக்கும் வீட்டை தங்கள் பெயருக்கு மாற்றித் தருவதற்கு நிமலன் மூலம் ஏற்பாடு செய்யத் திட்டமிட்டு அதற்கான அலுவல்கள் செய்தார்கள். அதனால் நிமலனின் மாமா அவனைத் தொடர்பு கொண்டு கொழும்பிற்கு வந்தவுடன் தன்னைச் சந்தித்து அதற்கான பத்திரங்களைப் பெற்றுச் செல்லுமாறு கூறி இருந்தார். அதை நிமலன் அவளோடு தொடர்பு கொண்டு அவள் அவிப்பிராயத்தைக் கேட்டான். வாணி அதற்கு அந்த வீட்டை யாரும் விற்பதில் தனக்கு விருப்பம் இல்லை என்பதால் நிமலனை எந்தக் கையெழுத்தும் வைக்காது, பத்திரங்களை மட்டும் அவர்கள் நிம்மதிக்காக வாங்கிக் கொண்டு வருமாறு கூறி இருந்தாள். அது இங்கிலாந்தில் உள்ள சட்டத்தரணிகள் முன்னிலையில் கையெழுத்திட்டு உறுதிப்படுத்தப்பட்டால் மட்டுமே இலங்கையில் செல்லுபடியாகும். அதை அவள் செய்வதில்லை என்பதில் உறுதியாக இருந்தாள். இந்த வருத்தமான சந்தர்ப்பத்திலும் அவள் தனது சொத்தை யாருக்காகவும் விட்டுக் கொடுக்காது பாதுகாப்பதை நினைக்க நிமலனுக்கு வியப்பு உண்டாகியது. அதே நேரம் மகளின் வருத்தத்தைப் பற்றிக் கவலைப்படாமல் தாய் சொத்தில் குறியாக இருப்பதும் அவனுக்கு அதிர்ச்சியை உண்டு பண்ணியது.

யாழ்ப்பாணத்தில் அலுவல் முடிந்ததும் நிமலன் முதலில் கொழும்பிற்கு வந்த அன்று மாலை மாமா வீட்டிற்குச் சென்றான். அவருக்குத் தான் வருவதை அவன் ஏற்கனவே கூறி இருந்தான். அவர் தான் பிட்டுச் சமைப்பதாகவும் வந்து சாப்பிட்ட பின்பு பத்திரங்களை எடுத்துக் கொண்டு போகுமாறும் கூறியிருந்தார். நிமலனுக்கும் அது சரி என்றே தோன்றியது. அவன் மாலை புறப்பட்டு மாமா வீட்டிற்குச் சென்றான். சாப்பிட்ட பின்பு கதைத்துக் கொண்டு இருக்கும் போது வாணியின் அல்பம் கண்ணில் பட்டது. அதை எடுத்துப் புரட்டிப் பார்த்த போது வாணியின் பழைய புகைப்படங்கள் நிறைய இருந்தன. அதை அவன் மாமாவிடம் கேட்டு வாங்கிக் கொண்டான். பின்பு

பத்திரங்களையும் வாங்கிக் கொண்டு விடுதிக்கு வந்தான். வரும்போது ‘கிங்பிசர் ஸ்ரோங்’ பியரில் நான்கு பியரும் மிக்சரும் வாங்கி வந்தான். விடுதிக்குச் சென்று எதுவும் செய்ய முடியாது. அதற்கு இது நல்ல பொழுது போக்காய் இருக்கும் என்பது அவன் எண்ணம். இந்த விடுதிக்கு வந்த பின்பு ஒரு முறை வாணி அவனோடு அலைபேசியில் தொடர்பு கொண்டு கதைத்தாள். இன்று கதைப்பாளா என்பது நிமலனுக்குத் தெரியாது. அதற்காகக் காத்திருக்கும் எண்ணம் அவனிடம் இருக்கவில்லை. வியரை அருந்துவோம் என்று எண்ணினான். நித்திரை ஆவதற்கு முன்பு அவள் கதைத்தால் கதைக்கலாம் என்று எண்ணிக் கொண்டான்.

மூன்று பியர்கள் குடித்து முடிக்கும் போது அவளிடம் இருந்து அலைபேசி அழைப்பு வந்தது. நிமலன் அரை மனதோடு அதை எடுத்தான். அவனுக்கு அப்போதே நல்ல ஏற்றம் என்பது விளங்கினாலும் மீதி ஒன்றை வைத்து என்ன செய்வது என்கின்ற எண்ணத்தில் அதையும் எடுத்துத் திறந்து பருகிப் பருகிக் கதைத்தான். உடம்பு அலுப்பாய் இருந்ததால் கட்டிலில் சார்ந்து படுத்த வண்ணம் கதைத்தான். எவ்வளவு நேரம் கதைத்தான் என்ன நடந்தது என்பது அவனுக்குத் தெரியாது. யாரோ வெளிப் பக்கத்தால் யன்னலைத் தட்டித் தட்டி ‘கலோ எழும்பிக் கதவைத் திறவுங்க... கதவைத் திறவுங்க...’ என்று கத்தும் சத்தம் கேட்டது.

நிமலனுக்கு முதலில் எதுவும் விளங்கவில்லை. தன்னை நிதானப்படுத்திக் கொள்ள அவனுக்குச் சிறிது நேரம் தேவைப்பட்டது. பின்பு சமாளித்த வண்ணம் எழுந்து சென்று கதவைத் திறந்தான். அவன் கதவைத் திறந்ததும்,

‘என்ன சேர் இப்பிடிச் செய்தீட்டிங்க? வந்த இடத்தில இப்பிடியா செய்கிறது? நீங்கள் உங்கடை வைப்போடை கதைக்கேக்க இடையில வைச்சிட்டியளாம். உங்களுக்கு என்ன நடந்தது எண்டு எங்களைக் கேட்டுச் சொல்லச் சொல்லி உங்கடை வைப் இங்கிலாந்தில இருந்து போன் பண்ணி பேசத் தொடங்கீட்டா. நீங்கள் நித்திரையா இருப்பியள் எண்டு நாங்கள் சொல்லிப் பார்த்தம். ஆனா... அதுக்கு அவ நீங்கள் தன்னோடை கதைச்சுக்

கொண்டு இருக்கேக்க கதைக்கிறதை நிப்பாட்டிப் போட்டியள் எண்டதால ஏதாவது நடந்திருக்கும் எண்டு உடனடியா உங்களை எழுப்பித் தன்னோடை கதைக்க தரவேணும் எண்டு அடம்பிடிச்சா. அப்படிச் செய்யாட்டி தங்கடை அப்பா மூலம் 'எஸ்.பி'யைத் தொடர்பு கொண்டு இங்க வந்து விசாரிக்க வைப்பன் எண்டு வேறை சொன்னா. அதுதான் நாங்களும் உங்ளை எழுப்பலாம் எண்டு முதல்ல கதவில அரைமணித்தியாலம் தட்டி இருப்பம். நீங்கள் எழும்பவே இல்லை. பிறகுதான் மேல ஏறி யன்னலால தட்டினம். நாங்கள் எங்கடை கொட்லுக்கு முன்னாலதான் 'டீ.ஐ.யீ' இருக்கிறார் எண்டதை மறந்துபோனம். அவர் எழும்பி வந்து என்ன நடக்குது எண்டு கேட்கிற அளவுக்குப் பிரச்சனை. நாங்கள் சமாளிக்காட்டி ஆமிதான் வந்திருக்கும். இவ்வளவு நடந்தும் நீங்கள் எழும்பவே இல்லை. இப்படி எல்லாம் நீங்கள் செய்யக் கூடாது. நீங்கள் இப்பவே றூமைக் காலி பண்ணுங்க. உங்களால எங்களுக்குப் பெரிய பிரச்சனை.'

நிமலனுக்கு என்ன செய்வது என்று முதலில் விளங்கவில்லை. அவன் இதைக் கேட்டு விறைத்துப் போய் நின்றான். பின்பு எப்படியாவது சமாளிக்க வேண்டும் என்று அவனுக்குத் தோன்றியது. இனி வேறு விடுதிக்கு மாறிக்கொண்டு திரிவதில் அவனுக்கு விருப்பம் இருக்கவில்லை. 'அந்த விசரியாலேயே இந்தப் பிரச்சனை எல்லாம்' என்கின்ற கோபம் வந்தது. இனிமேல் இலங்கைக்கு வருவது என்றால் அவளிற்கு மறந்தும் சொல்லக் கூடாது என்று அவன் எண்ணிக் கொண்டான்.

'நாளைக்கு ஒரு நாள்தான் நான் இங்க தங்கி நிற்பன். தயவுசெய்து என்னை மன்னிச்சிடுங்க. அவளுக்குச் சாதுவா வருத்தம் இருக்குது. அதாலதான் அப்படி உங்களோடை கதைச்சு இருக்கிறாள். அதுக்காக நான் மன்னிப்புக் கேட்கிறன். தயவு செய்து ஒரு நாள் மட்டும் எனக்கு நேரம் தாங்க.'

'சரி... நான் மனேச்சரிட்டை சொல்லுகிறன்.' என்று கூறிவிட்டு அவர் போய்விட்டார்.

நிமலனுக்கு வாணி மீது கடும் கோபமாக இருந்தது. அவள் ஒரு பையித்தியக்காரி என்று எண்ணிக் கொண்டான். அடுத்த நாள் அனைவரும் அவனைத் துக்கம் விசாரிப்பது போல விசாரித்தனர். அவனுக்கு அவமானமாய் இருந்தது. சொல் இழந்து வழிவதைத் தவிர வேறு வழி தெரியவில்லை. வாணிமீது அடங்காத கோபமும் வெறுப்பும் உண்டாகியது.

## 7 மூன்றாவது பயணம்

இம்முறை நிமலன் 'ஈ.பி.ஸ்' விடுதியில் அறை பதிவு செய்து இருந்தான். இன்னும் அவளுக்கு வீடு கிடைக்கவில்லை. மிக விரைவாகக் கிடைக்கும் என்கின்ற நம்பிக்கை இருந்தது. இருந்தும் வந்து போவது தொடக்கம் விடுதியில் தங்குவது என்று பல செலவுகளை அவன் பார்த்துக் கொள்ள வேண்டி இருந்தது. வீடு கிடைத்தால் அந்தத் தேவை இல்லாத செலவுகள் இருக்காது. அது கிடைப்பது தாமதம் ஆனதில் அவனுக்குக் கவலை.

இம்முறை விமான நிலையத்தில் நிமலனைக் கண்டவுடன் அவள் அழத் தொடங்கிவிட்டாள். அவள் அன்பில்தான் அழுகிறாள் என்று அவன் முதலில் நினைத்தான். ஆனால் அவளோடு கதைத்த போது அவள் அவன் சிலோனில் பார்த்த வாணி அல்லது முதல் முறை வரும்போது பார்த்த வாணி அல்ல என்பது நன்கு விளங்கியது. அதற்கான காரணம் என்ன என்பதும் விளங்கியது. ஆனால் அதற்குத் தான் என்ன செய்வது என்பது மட்டும் அவனுக்கு விளங்கவில்லை. அவன் அவளைத் தன்னோடு அணைத்து,

'அழாத... அழாத.' என்று கெஞ்சினான்.

அதை அடுத்து அவள் அமைதியாகினாள். ஒருவாறு பேருந்தில் ஏறி அவர்கள் பயணமானார்கள்.

அவளைப் பார்க்க அவனுக்கு இரக்கமாகவும், பயமாகவும் இருந்தது. அவன் நினைத்ததும் அறிந்ததும் சரியாகவே

தோன்றியது. அவள் நடையில், அவள் அசைவில் என்று நிறைய மாற்றங்கள் இருப்பதாய் அவனுக்குத் தோன்றியது. அவளைப் பார்க்கவும் அவளிடம் அகப்பட்ட தன்னைப் பார்க்கவும் அவனுக்குப் பரிதாபமாகியது. ஆயிரம் பொய்கள் சொல்லியும் ஒரு கலியாணம் செய்யலாம் என்கின்ற ஒரு தப்பான நம்பிக்கை தமிழர்களிடம் உண்டு. நிமலனைப் பொறுத்தவரை கலியாண விசயத்தில் ஒரு பொய்கூடச் சொல்லக் கூடாது என்று தோன்றியது. எல்லாம் நடந்து முடிந்து விட்டது. இனி என்ன செய்வது? எப்படி இவளோடு வாழ்வது? என்று அவனுக்கு விளங்கவில்லை.

பேருந்து 'பிக்கட்லி' நிறுத்தம் வரைக்கும் சென்றது. அங்கு இறங்கி விடுதிக்குச் செல்வதற்கு வேறு பேருந்து மாற வேண்டும். அவள் தனக்கு எப்படிப் போவது என்று தெரியும் என்பதால் நிமலன் அவள் கூறிய பேருந்தில் ஏறினான். பின்பு அவளுக்கு ஏதோ சந்தேகம் உண்டாகச் சாரதியை ஓடிப்போய் கேட்டாள். சாரதி அந்தப் பேருந்து விடுதிப் பக்கம் செல்லாது என்றவுடன் அவள் பெரும் அலமலக்கப்பட்டாள். நிமலனை இறங்கச் சொல்லியபடியே பேருந்தால் இறங்கிவிட்டாள். அதற்கிடையில் பேருந்து புறப்பட நிமலன் அடுத்த தரிப்பில் இறங்க வேண்டியதாகிற்று. அது அவனுக்குக் கோபத்தை உண்டு பண்ணியது. வருத்தக்காரிமேல் கோவப்படுவதில் எந்த அர்த்தமும் இல்லை என்பதும் அவனுக்கு விளங்கியது. அதனால் அவன் அமைதி காத்தான். பின்பு நிமலன் மீண்டும் நடந்து வந்து அவளை அடைந்தான். அதன் பின்பு அவனே சரியான தரிப்புத் தேடிப்பிடித்து ஒருவாறு விடுதிக்கு வந்து சேர்ந்தார்கள்.

விடுதிக்கு வந்து அறைக்குள் புகுந்ததும் அடங்கா மோகம் தணிக்கும் செயலில் அவர்கள் ஈடுபட்டார்கள். அதன் பின்பு அவள் சிறுநீர் கழிப்பதற்குச் சென்றாள். அவளுக்கு அதிலும் தற்போது சிக்கல் ஏற்பட்டுள்ளதை நிமலனால் பார்க்க முடிந்தது. அவள் ஒரு போத்தலில் நீர் கொண்டு சென்றாள். அதை வைத்து என்ன செய்தாள் என்பது அவனுக்குத் தெரியாது. ஆனால் அவளுக்குப் பல சிக்கல்கள் உண்டாகின்றன என்பது மட்டும் அவனுக்கு விளங்கியது. நிமலனுக்கு எதுவும் பேசத் தோன்றவில்லை. அவன் பேசாது யோசித்துக் கொண்டு

இருந்தான். அவளுக்குப் பல பிரச்சனைகள் இருந்தாலும் நிமலன் யோசித்துக் கொண்டு இருப்பதை அவள் கவனிக்கத் தவறவில்லை. அவள் நிமலனைப் பார்த்து,

‘உங்களுக்கு என்ன இப்ப பிடிக்குது இல்லைப் போல இருக்குது?’

‘ஏன் அப்பிடிக் கேட்கிறாய்? பிடிக்காமலே அங்க இருந்து இங்க வந்து இருக்கிறன்?’

‘நீங்கள் வந்து இருக்கிறது உண்மைதான். ஆனா... உங்கடை நினைப்பு கொஞ்சமும் இங்க இருக்கிற மாதிரித் தெரிய இல்லையே?’

‘சும்மா இரு. ஏதோ கதைக்கோணும் எண்டதுக்காக என்னோடை இப்பிடிக் கதைக்காத.’

‘உங்களுக்கு இப்ப அப்பிடித்தான் இருக்கும். நீங்கள் இதுவும் சொல்லுவியள் இதுக்கு மேலையும் சொல்லுவியள்.’

‘எப்பிடி இருந்தாலும் நீ என்னைக் குற்றம் சொல்ல முடியாது. மறைக்கக்கூடிய விசயத்தையா மறைச்சு இருக்கிறியள்? இவ்வளவு பெரிய வருத்தத்தை வைச்சுக் கொண்டு மற்றவையின்ரை வாழ்க்கையைச் சிக்கலாக்குகிறன் என்கின்ற எந்த யோசினை இல்லாமல் ஒரு விசயத்தை செய்திருக்கிறது இப்ப எண்டாலும் உனக்கு விளங்குதா? உனக்கு இனி உன்னைக் கொண்டு நடத்தவே உதவி வேணும். இதுக்குள்ள ஒரு கலியாணம். வாழ்க்கை. சும்மா என்னை இழுத்து விடாமல் இருந்து இருக்கலாம். என்ன வருத்தம் இருக்குது எண்டு ஒரு சொல்லுச் சொல்லி இருந்தால் நான் சரியான முடிவு எடுத்திருப்பன். அந்தச் சந்தர்ப்பத்தை நீங்கள் எனக்குத் தர இல்லை. எப்பிடியோ அது தப்புத்தான்.’

‘சொல்லி இருந்தா என்னைக் கலியாணம் கட்டி இருப்பியளா?’

‘நிச்சயமா கட்டி இருக்க மாட்டன். அது ஒரு தேவை இல்லாத விஷயம் எண்டு முடிவு எடுத்திருப்பன். அது எனக்குத் தேவை இல்லாத சிக்கல். நீ இங்க வரவேணும் எண்டால் நீயே வந்து இருக்கலாம். சரி வாறத்துக்கு ஒரு உதவி வேணும் எண்டா அதைச் சொல்லி இருக்கலாம். நான் நிச்சயம் உதவி செய்திருப்பன். இப்பவும் நான் அந்த உதவியைச் செய்துதான் இருக்கிறன். ஆனா... நீதான் என்னைத் தேவை இல்லாத சிக்கலில மாட்டி விட்டிருக்கிறாய்.’

‘அதில என்ன பெரிய சிக்கல்? இலங்கைக்கு மட்டும் திரும்பிப் போய் கலியாணம் செய்ய முடியாது. கலியாணம் செய்ததை நானும் இங்க பதிய முடியாது. அதை நீங்களும் அங்க பதியப் போகிறது இல்லை. சிலோன்லேயும் எங்கயோ ஒரு மூலையில இருக்கிற பதிவாகத்தான் அது இருக்கும். எப்பிடி எண்டாலும் சிலோனைத் தவிர்த்த எங்கை எண்டாலும் நிங்கள் எப்பவும் கலியாணம் செய்யலாம் தானே? அதை யாரும் தடுக்க முடியாது.’

‘அது முதல்ல எனக்கு மனசிற்கு உறுத்தலா இருக்கும். எங்கை கலியாணம் செய்தாலும் அந்த உறுத்தல் இருக்கும். சிலோனைத் தவிர வேற எங்க ஒழுங்காய் எனக்கு ஆட்கள் கிடைக்கும்? எனக்கு அதுவும் சரி வரேல்லை.’

‘சும்மாய் என்னையே குற்றம் சொல்லாதேங்க. உங்களுக்கு கிடைச்சதை வைச்சு வாழத் தெரியேல்ல எண்டு சொல்லுங்க.’

‘அப்ப நான்தான் குற்றம் செய்தன் எண்டுறியா?.’

‘நான் அப்பிடிச் சொல்ல இல்லை. அதுக்காக என்னைப் பழி சொல்லிக் கொண்டு இருக்காதேங்க.’

‘உன்னைப் பழி சொல்ல வேணும் எண்டு இல்லை. ஆனாலும் எனக்கு ஏன் இந்தத் தேவை இல்லாத சிக்கல் எண்டு கவலையாக இருக்குது. ஒரு நல்ல செயல் என்ன எண்டா உன்னை ஒரு பாதுகாப்பான இடத்தில கொண்டு வந்து விட்டு இருக்கிறன். அதைவிட வேற ஒண்டும் இதில இல்லை.’

‘உங்கடை கதையைப் பார்த்தா நீங்கள் இனி இங்க வரமாட்டியள் போல இருக்குது. அப்பிடியே உங்கடை ஐடியா?’

‘இங்க வந்து இப்பிடி கொட்டலல்ல நிக்கிறது எண்டால் எனக்குச் இனிச் செலவு கட்டுபடியாகாது. அது எனக்குக் சரி வராது. அதால இனி நீ புது வீட்டுக்குப் போன பிறகுதான் நான் இங்க வருவன். அது வரைக்கும் நீ அமைதியாக காத்திருக்க வேணும். வேறை வழி இல்லை. அதுக்கு நான் இங்க வரமாட்டன் எண்டு அர்த்தம் இல்லை.’

‘அதுக்கு நாள் எடுத்தா? அந்த வீட்டை இவங்கள் எப்ப தருவாங்கள் எண்டு யாருக்கும் தெரியாது. நீங்கள் இப்பிடி என்னை இடையில கைவிடக் கூடாது. என்னுடைய நிலைமையையும் கொஞ்சம் யோசிச்சுப் பார்க்க வேணும்.’

‘தேவை இல்லாமல் பயப்பிடாதை. உனக்கு வீடு கிடைச்சதும் நான் இங்க வருவன்.’

‘எனக்கு ஏதோ முழுமையான நம்பிக்கை இல்லை. நான் மகளைத் திரும்ப எடுக்கிறதுக்கான வழக்கையும் நிப்பாட்டுவம் எண்டு நினைக்கிறன். என்னால அவளையும் வைச்சுக் கொண்டு இனிச் சமாளிக்க ஏலாது எண்டு நினைக்கிறன்.’

‘அது நல்ல முடிவு. உன்னால உன்னையே சமாளிக்க ஏலாது. அதுக்க இன்னும் ஒரு பாரம் எதுக்கு?’

*

நிமலனுக்கு அவளைப் பார்க்கக் கவலையாகவும் இருந்தது. கோபமாகவும் இருந்தது. அவளது மனநிலை இப்போது வெகுவாக மாறி இருப்பதை அவனால் பார்க்க முடிந்தது. மூளையின் எந்த எந்தப் பகுதி தாக்கப்பட்டு இருக்கிறது என்று அவனுக்கு விளங்கவில்லை. இவளோடு இனி வாழ்வது வருத்தக்காரியோடு வாழ்வதைவிட மனநோயாளியோடு வாழ்வதைப் போலவே இருக்கும் என்பது அவனுக்கு விளங்கியது. அவள் இப்போது பொருட்களை வாங்கி வருவதற்கு ஒரு வண்டில் வாங்கி வைத்திருந்தாள். அதற்குள் ஏதோ சமைத்தும் அவனுக்கு எடுத்து வந்தாள். அதில் எந்தப் பிழையும் இல்லை என்றாலும் அவள் அடிக்கடி அழுகிறாள். அதை இழுத்துக் கொண்டு அவள் நடப்பதைப் பார்க்க நிமலனுக்கு ஒரு மாதிரியாக இருக்கும். கதைத்துக் கொண்டு இருக்கும் போது திடீரெனக் கோபத்தில் அழுவாள். சில வேளை அவள் வண்டிலோடு அறைக்குள் வரும்போது தனக்குத் தானே ஏதோ கதைத்த வண்ணம் வருவதை அவன் கண்டு விட்டு அறைக்கு வெளியே சென்று யாராவது அவளோடு வந்து இருக்கிறார்களா என்று எட்டிப் பார்ப்பான். அங்கு யாரையும் காணக் கிடைக்காது.

'என்ன உன்னோடை நீயே கதைச்சுக் கொண்டு வந்தநீயே?' என்று அவன் கேட்டால்,

'அது ஒண்டும் இல்லை.' என்பாள்.

நிமலனுக்கு விளங்கியது. இந்த வருத்தம் எந்த நரம்புக்கலத்தின் மையிலீன் உறையை அழிக்கிறது என்பதைப் பொறுத்து அது பல வடிவம் எடுக்கும். அதில் இப்பிடியான பிரச்சனைகளும் வருவது உண்டு. இவளுக்கு இப்போதே இப்படி இருக்கிறது என்றால் நாட்கள் செல்லச் செல்ல அதன் தாக்கம் மேலும் அதிகமாக இருக்கும். அப்படி மனநிலை பாதிக்கப்பட்டவளோடு எப்படி வாழ முடியும் என்பது அவனுக்கு விளங்கவில்லை. எதற்கும் அவளின் வருத்தங்கள், கடந்த காலங்கள் பற்றி எதுவும் கதைக்காமல் இருப்பதே சரி என்று அவனுக்குத் தோன்றியது. அதன்படி அவள் கொண்டு வந்த சாப்பாட்டை வாங்கி வந்த வொட்காவில் ஒரு பகுதியைக் குடித்த பின்பு சாப்பிட்டான். அதன்

பின்பு நடத்த வேண்டிய திருக்கூத்தை நடத்திப் படுக்கும் போது ஒன்பது மணி இருக்கும்.

அடுத்த நாள் மீண்டும் நோர்வேக்குப் போவதாக இருந்தது. அன்று இரவு அலுவல்கள் முடிந்த பின்பு நன்கு நித்திரை கொள்ள வேண்டும் என்று நிமலன் நினைத்தான். ஆனால் அவள் அடிக்கடி போத்தல் ஒன்றைத் தூக்கிக் கொண்டு குழியல் அறைக்குச் சென்று வந்தாள். அவள் எழும்போது கப்பல் ஆடுவது போலக் கட்டில் ஆடுவதால் அவன் நித்திரை அடிக்கடி கலைந்தது. அதனால் அவனுக்கு நித்திரை வெறி முறியவில்லை. காலை ஆறுமணி போல அவனை அவள் அந்த ஆசையோடு எழுப்பினாள். அவளுக்கு எப்படியோ அதில் எந்தப் பாதிப்பும் ஏற்படவில்லை. நிமலன் கோபத்திலும் நித்திரை வெறியிலும் இருந்தான். அவன் அவளைப் பார்த்து,

'ஒழுங்கா மூத்திரம் பெய்ய முடிய இல்லை. உது மட்டும் இப்ப தேவையே? சும்மாய் படு பார்ப்பம்.' என்று கோபத்தில் கூறிவிட்டுத் திரும்பிப் படுத்துக் கொண்டான்.

'உங்களுக்கு என்னைப் பிடிக்கேல்லை. அதுக்காக இப்பிடி எல்லாம் பேசாதீங்க. நான் வெளிக்கிடுகிறன். இனிமேல் நான் உங்களைத் தொந்தரவு செய்ய மாட்டன். நீங்கள் எனக்காக இனி இங்கை வரவும் தேவையில்ல. மினக்கெடவும் தேவையில்லை. நான் போகிறன்.' என்று கூறிய வண்ணம் அவள் தான் கொண்டு வந்த பொருட்களை எடுத்து வண்டிலில் அடுக்கத் தொடங்கினாள். நிமலன் அதைப் பார்த்துவிட்டு,

'சொறி நான் அப்பிடிச் சொன்னது பிழைதான். சொறி. நீ இப்ப போகாத.' என்றான்.

'உங்கடை மனசில இருந்ததுதான் இப்ப வெளிய வந்து இருக்குது. இனியும் நான் உங்களோடை இங்க இருக்க விரும்பேல்லை.'

‘அப்ப நீங்கள் செய்தது சரி எண்ட நினைப்பா?’

‘சொறி. ஆனா... இனி நான் உங்களோடை இருக்க முடியாது. நான் போகிறன்.’

என்று கூறிய அவள் புறப்பட்டு வெளியே சென்றாள். நிமலன் எழுந்து சென்று கதவோடு நின்று பார்த்தான். அவள் பாரம் தூக்கி அருகில் நின்று அழுதாள். நிமலனுக்கு யாரும் பார்த்தால் என்ன நினைப்பார்கள் என்று எண்ணக் கோபம் எரிமலையாக வெடித்தது. அவன் கதவைச் சாத்திவிட்டு வந்து மீண்டும் படுத்தான். சிறிது நேரத்தின் பின்பு கதவை வந்து அவள் மீண்டும் தட்டினாள். நிமலன் கதவைத் திறந்தான்.

‘உள்ள வா.’ என்றான்

‘நான் உள்ள வர இல்லை. நீங்கள் என்னுடைய மோதிரத்தைத் தாங்க. எல்லாம் முடிஞ்ச பிறகு அது மாத்திரம் ஏன் உங்களுக்கு? எனக்கு அது ஆபத்திற்கு உதவும்.’

நிமலனுக்குக் கடுமையான கோபம் வந்தது. அவன் கோபத்தில் மோதிரத்தைக் கழற்றி வீசி எறிந்தான். அவள் அதைப் பொறுக்கி எடுத்துக் கொண்டு மீண்டும் வண்டிலை இழுத்த வண்ணம் அழுது கொண்டு சென்றாள். பின்பு பாரம் தூக்கி அருகில் நின்று தொடர்ந்தும் அழுதாள். நிமலன் கதவை அடித்துப் பூட்டிவிட்டு வந்து படுத்தான். அவனுக்கு நித்திரை வரவில்லை. எழுந்தான். அவள் தனது வருத்தத்தில் அப்படி நடந்து கொள்கிறாள் என்பது அவனுக்கு விளங்கியது. தான் ஒரு கை எழுத்துப் போட்டதிற்காக தனது வாழ்வை மொத்தமாகப் பாழாக்க முடியாது என்பதும் அவனுக்கு விளங்கியது. என்ன நடந்தாலும் அவளை இனி அரசு பார்த்துக் கொள்ளும் என்கின்ற நம்பிக்கை இருந்தது. அவன் மீண்டும் கதவைத் திறந்து பார்த்தான். அவளைக் காணவில்லை.



**Buttharin kadaisi kanneer , Short story collections First Edition January 2019**